marxist.tncpim.org 999 477 6471



ஆகஸ்ட் 2019, விலை ரூ.15.00

# மார்க்சிஸ்ட்

தத்துவார்த்த மாத இதழ்

2018 ஜனவரி முதல் ஒலி இதழாகவும் வெளியாகிறது

## உள்ளிருந்து கைப்பற்றப்பட்ட அரசு

* சாதி,வர்க்கம்,இயக்கங்கள்
* அதிகார குவிப்பும் அத்துமீறல்களும்

# மார்க்சிஸ்ட் தத்துவார்த்த மாத இதழ்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)

தமிழாக்கம் - *மின்னூல் வெளியீடு :*

*FreeTamilEbooks.com*



பதிவிறக்கம் செய்ய -

http://FreeTamilEbooks.com/ebooks/marxist_monthly_journal_august

மின்னூலாக்கம் - அ. அருந்தமிழ்யாழினி -

aruntamilyazhiniaravindan@gmail.com

This Book was produced using LaTeX + Pandoc

# பொருளடக்கம்


*1.* அதிகாரக் குவிப்பும் அத்துமீறல் . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . *5*

*2.* சாதி, வர்க்கம், இயக்கங்க . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . *15*

*3.* உள்ளிருந்தே கைப்பற்றப்பட்ட அரசு அய்ஜாஸ் அகமத் – உடன் ஓர் உரையாடல் . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . *26*

*4.* கல்வியும் கம்யூனிஸ்டுகளும் . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . *36*

*5.* எங்கெல்ஸ் *125:* மார்க்சியத்தின் அடித்தளம் எங்கெல்ஸ் . . . . . . . . . . . . *49*

# 1. அதிகாரக் குவிப்பும் அத்துமீறல்

உ. வாசுகி

அரசு என்பது ஆளும் வர்க்கத்தின் ஒடுக்குமுறை கருவி என்றார் மார்க்ஸ். ஒரு நாட்டில் உள்ள அரசின் வர்க்கத் தன்மையைப் பொறுத்து, ஆளும் வர்க்கத்தின் நலனுக்கு ஏற்பவே அரசின் அங்கங்களும், அதிகார கட்டமைப்பும் அமையும். இந்தியாவும் அதற்கு விதிவிலக்கல்ல. இந்தியாவின் அரசியல் சாசனம், சுதந்திரத்துக்குப் பின் நவீன இந்தியா எத்தகையதாக கட்டமைக்கப்பட வேண்டும் என்ற பல நீரோட்டங்களின் கருத்து மோதல்களில் உருவானது. இந்திய முதலாளி வர்க்கத்தின் தலைமையிலான தேசிய நீரோட்டம், இடதுசாரி கருத்தோட்டம், ஆர்.எஸ்.எஸ். முன்வைத்த இந்து இந்தியா போன்ற பிரதான கருத்தியல்களில் ஆர்.எஸ்.எஸ்.சின் கண்ணோட்டம் நிராகரிக்கப்பட்டு, ஜனநாயக சோஷலிச குடியரசு என்ற அடிப்படையில் அரசியல் சாசனம் உருவாக்கப்பட்டது. பின்னர் மதச்சார்பின்மையும் இணைக்கப்பட்டது. டாக்டர் அம்பேத்கர் போன்ற தலைவர்களின் பங்களிப்பு இதில் முக்கியமானது.

கூட்டாட்சிக் கோட்பாடு இதில் இடம் பெற்றதற்கு முக்கிய காரணம் தேச விடுதலை போராட்டங்களில் மக்கள் பங்கேற்பும் , மொழி வழி மாநிலங்களுக்காகவும், மொழி கலாச்சாரம் பாதுகாக்கப்படுவதற்காகவும் பல்வேறு தேசிய இனங்கள் நடத்திய வெகுமக்கள் போராட்டங்களும்தாம். இவற்றில் இடதுசாரிகளின் பங்கு குறிப்பிடத்தக்கது. பல்வகை தேசிய இனங்கள், மொழிகள் உள்ளடங்கிய மாநிலங்கள் இணைந்த ஒன்றியம்தான் இந்தியா என்ற சாராம்சம் அரசியல் சாசனத்தில் இடம் பெற்றது. இந்தியாவில் பெரு முதலாளிகள் பெரிதும் வளர்ச்சியடையாத காலமாகவும் அது இருந்தது.

அரசியல் சாசனம் “வடிவத்தில் கூட்டாட்சி தன்மை (federal) கொண்டதாக இருந்தாலும், குணாம்சத்தில் மத்திய அரசிடம் அதிகார குவிப்புக்கு (unitary) வழி வகுப்பதாக உள்ளது” என்பது அன்றைக்கே கம்யூனிஸ்டுகளின் விமர்சனமாக அமைந்தது. பிரதான அதிகாரங்கள், வருவாய் மற்றும் வளங்களின் மீது கட்டுப்பாடு போன்றவை மத்திய அரசின் பொறுப்பில் இருந்தன. மாநில அரசுகளைக் கலைக்கும்

*உரிமை மத்திய அரசிடம் இருந்தது. நிதி உள்ளிட்ட பல்வேறு அம்சங்களில் மத்திய அரசை சார்ந்து இருக்க வேண்டிய நிலைமையில்தான் மாநிலங்கள் வைக்கப்பட்டன.*

*ஆளுநர்கள் மத்திய அரசின் முகவர்களாக செயல்பட்டனர். பொதுப்பட்டியலில் உள்ள அம்சங்கள் மீது முடிவெடுக்கும்போது கூட மாநிலங்களுடன் கலந்து பேசுவதற்கான ஏற்பாடு இல்லை. காலப்போக்கில் இந்த முரண்பாடு அதிகரித்தது. மத்திய மாநில உறவுகளை மறு வரையறை செய்யக்கோரி, 1977-ல் மேற்கு வங்க இடது முன்னணி அரசு 15 அம்ச கோரிக்கை சாசனத்தை உருவாக்கியது. வேறு பல கட்சிகளும் இந்நிலைபாட்டை எடுத்தன. 1983-ல் ஸ்ரீநகரில் நடந்த மாநாடு இத்தகைய கட்சிகளை ஒருங்கிணைத்தது. அதிகார பரவல் என்பது மைய அரசை பலவீனப்படுத்தாது; மாறாக அடித்தளத்தை வலுப்படுத்தும் என்று தோழர் ஜோதிபாசு அம்மாநாட்டில் முன்வைத்தார். அதே வருடம் மத்திய மாநில உறவுகளை மறு சீரமைப்பு செய்ய சர்க்காரியா கமிஷனை மத்திய அரசு அமைத்தது. இதன் அறிக்கை பல அடிப்படை முரண்பாடுகளைத் தீர்க்க உதவவில்லை. 1990-ல் தேசிய முன்னணி அரசு, மாநிலங்களுக்கிடையேயான கவுன்சிலை (Inter-State council) உருவாக்கியது. இது வரவேற்கத்தக்கதாக இருந்தாலும், இதுவும் அடிப்படை பிரச்னைகளுக்கு வழிகாட்டவில்லை. மேலும் பல புதிய சிக்கல்கள் முளைத்தன. 2007-ல் ஐக்கிய முற்போக்கு கூட்டணி, மீண்டும் ஒரு கமிட்டியை, மத்திய மாநில உறவுகள் சம்பந்தமாக அமைத்தது. அதன் வரம்பும் கூட மாநிலங்களைக் கலந்தாலோசிக்காமல் நிர்ணயிக்கப்பட்டது.*

*பொதுவாக, அரசியல் சாசனத்தில் இருந்த கூட்டாட்சி அம்சங்களை வலுப்படுத்தும் விதமாக, மாநிலங்களின் உரிமைகளைப் பாதுகாக்கும் முறையிலேயே கம்யூனிஸ்ட் கட்சியின் தலையீடுகள், நிலைபாடுகள் அமைந்தன. மத்திய முதலாளித்துவ-நிலப்பிரபுத்துவ அரசின் அதிகார குவிப்பை நிலைநிறுத்துவதாகவே காங்கிரசின் செயல்பாடுகள் இருந்தன. அரசின் வழிகாட்டுதல் மற்றும் உதவியோடு இந்தியாவில் முதலாளித்துவ வளர்ச்சி பாதை போடப்பட்டது. இந்தத் தேவைக்கு ஏற்றாற் போல் மாநில உரிமை வரம்பை மீறும் மத்திய அரசின் நடவடிக்கைகள் தொடர்ந்தன. மாநில முதலாளித்துவ கட்சிகளைப் பொறுத்தவரை, அவற்றின் தோற்றம் மாநில உரிமைகள், மொழி, கலாச்சாரம் போன்றவற்றை அடிப்படையாக வைத்து உருவாக்கப்பட்டாலும்,*

*மாநில உரிமைகளுக்கான அவர்களின் வலுவான குரல், நவீன தாராளமய காலகட்டம் மாநில முதலாளிகளின் வளர்ச்சிக்குக் கதவைத் திறந்து விட்ட பின்னணியில், தளர்ந்து போனது.*

*இந்திய முதலாளித்துவத்தின் தடையற்ற வளர்ச்சிக்கு அரசின் கட்டுப்பாடுகள் ஒரு கட்டத்தில் தடையாக மாறின. 1990களில் நவீன தாராளமய கொள்கைகள் சுவீகரிக்கப்பட்ட பின்னணியில், சர்வதேச நிதி மூலதனம் விருப்பம் போல் லாபத்தைத் தேடி உலகம் சுற்றுவதற்கு ஏதுவாக அரசின் பங்கு பாத்திரம் மாறியது. ஒருங்கிணைந்த சந்தை உருவாவது முதலாளித்துவ வளர்ச்சிக்குப் பலனளிக்கும் என்ற நிலையில், மத்திய அரசின் கையில் மேலும் அதிகாரங்கள் மாறவும், மாநில உரிமைகள் நீர்த்துப் போகவுமான நடவடிக்கைகள் பின்தொடர்ந்தன. பெரு முதலாளிகளின் வர்க்க பிரதிநிதியான காங்கிரஸ் இந்தப் பாதையில்தான் செயல்பட்டது. பின்னர் வந்த பாஜக அதிகார குவிப்பை அடுத்த கட்டத்துக்கே கொண்டு போனது. நிதி மற்றும் வருவாய் பகிர்வு குறித்த அதிகார குவிப்பு பிறிதொரு கட்டுரையில் இடம் பெறும். அரசியல் பாதிப்புகளை இங்கு பரிசீலிக்கலாம்.*

### *பாஜக ஆட்சியில் அதிகார குவிப்பு:*

*பாஜக ஆட்சியில் பெருமளவு அதிகாரங்களை மத்திய அரசும், பிரதமர் அலுவலகமும் தம் வசம் குவித்துக் கொள்வதை வெறும் எதேச்சாதிகார நடவடிக்கையாக, மீறலாக மட்டும் பார்க்க இயலாது. பாஜக அரசு இப்படித்தான் இயங்கும். அதன் சித்தாந்தம் அப்படி. வேறு வகையிலான அறிவிப்புகள், வாய் ஜாலங்கள் அனைத்தும் புலியின் மீது போர்த்தப்பட்ட பசு தோல்தான்.*

*ஆர்.எஸ்.எஸ்.சின் வழிகாட்டுதலில் இயங்கும் பாஜக அரசு, கார்ப்பரேட்டுகளின் ஒட்டுமொத்த ஆதரவைப் பெற்றிருக்கிறது. தீவிரமான கார்ப்பரேட் ஆதரவு கொள்கைகளை நடைமுறைப்படுத்தவும், ஏற்க மறுக்கிற மாநிலங்களின் எதிர்ப்பை நசுக்கவும் அதிகாரங்கள் மத்திய அரசிடம் குவிக்கப்பட வேண்டியிருக்கிறது. சர்வதேச நிதி மூலதனம் நாடு நாடாக போவதற்கும், வெளியேறுவதற்கும் ஒரு தேசமே கட்டுப்பாடுகளை அகற்ற வேண்டும் என்னும்போது, மாநிலங்களும் அப்பாதையில் செல்ல நிர்ப்பந்தப்படுத்தப்படுகின்றன. ஒரு பரந்து விரிந்த ஒருங்கிணைக்கப்பட்ட சந்தை நவீன தாராளமய காலத்தின் கட்டாயம்.*

*மறுபுறம், இந்துத்வ சித்தாந்தத்துக்கு ஏதுவாக ஒரே தேசம் – ஒரே கலாச்சாரம் – ஒரே மொழி என்ற ஒற்றை வடிவத்தைத் திணிக்கவும் அதிகார குவிப்பு மேலும் மேலும் தேவைப்படுகிறது. பாஜகவின் கலாச்சார தேசியம் என்ற சொல்லாடலும் சரி, அதன் கருத்தியலும் சரி, இந்தியாவின் பன்மைத் தன்மையை நிராகரிப்பதாகவே இருக்கிறது. தேசிய இனங்களின் பன்மைத் தன்மையை அங்கீகரிப்பதோடு தொடர்புடையதுதான் மாநில உரிமைகளுக்கான அங்கீகாரம். அது இல்லை என்றால் இது இருக்காது. இந்தப் பின்னணியிலேயே பாஜக அரசின் நடவடிக்கைகளைப் பொருத்திப் பார்க்க வேண்டும்.*

*உதாரணமாக, மானிய வெட்டு என்பது இவர்கள் பின்பற்றும் பொருளாதார கொள்கையின் ஒரு முக்கிய அம்சம். கொள்கை அடிப்படையில் இடதுசாரிகளும், மக்கள் போராட்டங்களின் வெப்பத்தில் இதர மாநில அரசுகளும், பொது விநியோக முறையை பலப்படுத்த வேண்டும் என்று கோருகின்றன. மானியத்தைக் குறைக்கும் நோக்குடன் வறுமை கோட்டைத் தீர்மானித்து, அதற்கேற்றாற் போல் அரிசி, கோதுமையை குறைப்பது, மண்ணெண்ணெயை நிறுத்துவது போன்ற நடவடிக்கைகள் காங்கிரஸ் ஆட்சியில் துவங்கின. தற்போது பாஜக ஆட்சி அதனைத் தீவிரமாக அமல்படுத்துகிறது. இது கேரளா, தமிழகம் போன்ற பொதுவிநியோக முறை ஓரளவு பலமாக இருக்கும் மாநிலங்களைக் கடுமையாக பாதித்துக் கொண்டிருக்கிறது. நேரடி பணப்பட்டுவாடா மூலம் பொதுவிநியோக முறையை முற்றிலும் சீரழிக்கும் நடவடிக்கைகள் படிப்படியாக அதிகரிக்கின்றன. தற்போதைய ஒரே தேசம் ஒரே ரேஷன் கார்டு என்பது பொதுவிநியோக முறையை நாசமாக்குவது மட்டுமல்ல; மாநில அரசாங்கங்கள் தம் மக்களுக்கு உணவு வழங்கும் அதிகாரத்தை மீறுவதாகவும் அமைகிறது. உலக வர்த்தகக் கழகத்தின் நிர்ப்பந்தங்கள், தம் குறுகிய அதிகாரங்களுக்கு உட்பட்டு சில நலத் திட்டங்களை அமல்படுத்த முயற்சிக்கிற மாநில அரசுகளுக்குத் தடையாக அமைகிறது. எனவே, சர்வதேச ஒப்பந்தங்கள் போடும் போது நாடாளுமன்ற ஒப்புதல் வேண்டும் என்பதை வலியுறுத்த வேண்டியிருக்கிறது. ஜி.எஸ்.டி., நீட் உள்ளிட்ட நடவடிக்கைகளும் மாநிலங்களின் உரிமைகளை மீறக்கூடியவையாகவே அமைந்தன.*

*மொழி என்பது ஒரு தேசிய இனத்தின் மைய அம்சங்களில் ஒன்று. இந்தி திணிப்பை வலுவாக எதிர்த்த மாநிலங்களில் முதன்மையானது தமிழகம். இந்தி*

*மற்றும் சமஸ்கிருத திணிப்பு, சமஸ்கிருத வளர்ச்சிக்குக் கூடுதல் நிதி ஒதுக்குவது, அகில இந்திய தேர்வுகள் சிலவற்றில் இந்தி, ஆங்கிலம் இரண்டை மட்டும் பயன்படுத்தியது, ரயில்வேயில் உள்ளக தொடர்புக்கு தமிழைப் பயன்படுத்தக் கூடாது என்று அறிவிப்பு வெளியிட்டது போன்ற நடவடிக்கைகள் மோடி ஆட்சியில் அடிக்கடி நடக்கின்றன. தேசிய வரைவு கல்வி கொள்கையின் மூலம் தமிழகத்தின் இரு மொழிக் கொள்கையை மறைமுகமாக மாற்ற முயற்சிக்கப்பட்டது. ஒவ்வொரு கட்டத்திலும் பலத்த எதிர்ப்புக்கிடையேதான் இது மாற்றிக் கொள்ளப்பட்டது. ஆனால் அடுத்த வாய்ப்பு வரும் போது மீண்டும் முயற்சிக்கப்படுகிறது. எனவே மாநிலங்களின் எதிர்ப்பை அங்கீகரித்து, எடுத்த முயற்சியை விட்டு விடுவது என்பது பாஜகவின் நோக்கமல்ல. தற்காலிகமாக விட்டுக் கொடுப்பது அல்லது தகர்த்து முன்னேறுவதுதான் அதன் உத்தியாகத் தெரிகிறது.*

*ஒரே தேசம் ஒரே தேர்தல் என்பதிலும் மாநிலங்களின் உரிமைகள் கடுமையாக மீறப்படுகின்றன. தேர்ந்தெடுக்கப்பட்ட மாநில அரசின் பதவிக்காலத்தை அதிகரிப்பது அல்லது குறைப்பது என்ற உள்ளடக்கம் இதில் உண்டு. ஆளுநரின் மறைமுக ஆட்சிக்கும் இதில் பரிந்துரை செய்யப்படுகிறது.*

*17வது மக்களவை அமைக்கப்பட்ட பிறகு, நிலைக் குழுக்களோ, அவைக் குழுக்களோ உருவாக்கப்படவில்லை. எனவே, பல்வேறு மசோதாக்கள் முறையாக தயாரிக்கப்படாமல் நேரடியாக நாடாளுமன்றத்தில் முன்மொழியப்பட்டன. பெரும் பாதிப்பை ஏற்படுத்தக் கூடிய, ஆழமாக ஆய்வுக்குட்படுத்தப்பட வேண்டிய, மாநில உரிமைகளைப் பறிக்கக் கூடிய மசோதாக்களை தெரிவுக் குழுவுக்காவது விட வேண்டும் என்ற எதிர் கட்சிகளின் கோரிக்கையும் நிராகரிக்கப்பட்டது. மக்களவையில் உள்ள மிருக பலத்தை வைத்து இந்த மசோதாக்கள் அனைத்தும் வரிசையாக நிறைவேற்றப் பட்டன. இவற்றில் பலவற்றில் மாநில உரிமைகள் வலுவாக மீறப்பட்டுள்ளன. அனைத்து மாநில மக்கள் பிரதிநிதிகளும் இடம் பெறும் நாடாளுமன்றமும், அது சம்பந்தமாக பின்பற்ற வேண்டிய நடைமுறைகளும் புறக்கணிக்கப்பட்டு, பிரதமர் அலுவலகம் சார்ந்து முடிவுகள் எடுக்கப்படுவதும் கூட்டாட்சிக்கு முரணானது.*

### *வரைவு தேசிய கல்விக் கொள்கை:*

*தற்போதைய வரைவு கொள்கையின் ஒரு பிரதான அம்சம் மையப்படுத்துதல். உதாரணமாக பிரதமர் தலைமையிலான ராஷ்டிரிய சிக்ஷா ஆயோக் என்ற அமைப்பின் கட்டுப்பாட்டிலும், கண்காணிப்பிலும் ஒட்டு மொத்த கல்வி நடவடிக்கைகள் இருக்கும் என்றும், ஆராய்ச்சி செய்ய வேண்டிய முக்கிய பிரச்னைகள் என்ன என்பதை இனி தேசிய ஆராய்ச்சி கழகம்தான் தீர்மானிக்கும் என்றும், இக்கழகம் தொழிலதிபர்கள், கார்ப்பரேட்டுகளின் நிதியைக் கொண்டு இயங்கும் என்றும் முன்மொழிவுகள் உள்ளன. கல்வியை மீண்டும் மாநில பட்டியலுக்குக் கொண்டு வர வேண்டும் என்ற கோரிக்கைகள் வலுவாக எழும் போது, நேர்மாறாக, அதனை மத்திய பட்டியலுக்கு அதிகாரபூர்வமாகக் கொண்டு செல்லாமலேயே, அத்தகைய விளைவுகளை இக்கொள்கை ஏற்படுத்துகிறது.*

*தேசிய மருத்துவ ஆணையம்:*

*இதிலும் இந்தியா முழுவதும் உள்ள மருத்துவம் சார்ந்த அனைத்து அம்சங்களையும் இந்தக் கமிஷன் கட்டுப்படுத்தும் என்பது வருகிறது. தனியார் மருத்துவ கல்லூரிகளில் 50% இடங்களுக்கான கல்வி கட்டணம் அவர்களின் விருப்பத்துக்கு விடப்படுகிறது. மீதி 50%க்கு கட்டணம் வசூலிக்க பொதுவான வழிகாட்டுதல்தான் இருக்குமாம். அதற்கு ‘உட்பட்டு’ தனியார் மருத்துவ கல்லூரிகளே நிர்ணயித்துக் கொள்ளலாம். மாநில அரசு நிர்ணயிக்க இங்கு ஏதும் இல்லை. 6 மாத சுருக்கப்பட்ட பயிற்சி பெற்று கிராமப்புறங்களில் மருத்துவம் பார்க்கலாம் என்பதும், எக்ஸ்ரே டெக்னிஷியன், லேப் டெக்னிஷியன், கம்பவுண்டர் உள்ளிட்டோர் கூட இதனை செய்யலாம் என்பதும், நகர்ப்புற, கிராமப்புறங்களுக்கிடையே மருத்துவ சிகிச்சை தரத்தில் நிலவும் பாகுபாடுகளை இது சட்டபூர்வமாக்குகிறது. மாநில அரசின் அதிகார வரம்பை மீறுகிறது. ஐந்தரை ஆண்டு மருத்துவ படிப்புக்குப் பிறகு, மீண்டும் ஒரு தேர்வு எழுதப்பட வேண்டும் என்ற நிபந்தனை, பல்கலைக்கழகம் மருத்துவ பட்டம் கொடுக்குமா? இந்தத் தேர்வை நடத்தும் முகமையின் சார்பில் பட்டம் கொடுக்கப்படுமா? என்ற குழப்பத்தை ஏற்படுத்துகிறது.*

*தகவல் உரிமை சட்டத் திருத்தத்தின்படி மாநில தகவல் ஆணையரின் ஊதியமும், பதவிக் காலமும் இனி மத்திய அரசின் கையில்தான். தேசிய புலனாய்வு முகமை*

*திருத்த சட்டத்தில், எந்த மாநிலத்தில் உள்ள எவரை வேண்டுமானாலும் மத்திய உள்துறை அமைச்சகம், பயங்கரவாதி என்று முத்திரை குத்தி, மாநில அரசின் ஒப்புதல் இல்லாமலே அவரைக் கைது செய்து, அவரின் சொத்துக்களைக் கைப்பற்றலாம் என்ற பிரிவு உள்ளது. விசாரணை செய்வதிலும் மாநில காவல்துறையை ஈடுபடுத்தப்போவதில்லை. சட்டம் ஒழுங்கு மாநில அதிகாரம் என்பது இதில் நீர்த்துப் போகிறது.*

*தொழிலாளர் நல சட்டத் திருத்தம்:*

*தொழிலாளர் நலன் என்பது மத்திய – மாநில பொதுப் பட்டியலில் உள்ளது. 44 தொழிலாளர் நல சட்டங்கள் வெறும் நான்கு தொகுப்பாக மாற்றப்படும் என்று மாநிலங்களுடன் விவாதிக்காமல், நிதிநிலை அறிக்கையின்போது நிதியமைச்சர் உரையில் அறிவிக்கப்படுகிறது. இவற்றில் ஊதியம் குறித்த தொகுப்பு தற்போது சட்டமாகியிருக்கிறது.*

*குறைந்த பட்ச ஊதியம் குறித்து 15வது இந்திய தொழிலாளர் மாநாடு வழங்கிய பரிந்துரையும், பின்னர் ராப்டகாஸ் வழக்கில் உச்சநீதிமன்றம் வழங்கிய தீர்ப்பும், இவற்றை ஏகமனதாக ஏற்று உருவாக்கப்பட்ட 45 மற்றும் 46வது இந்திய தொழிலாளர் மாநாடுகளின் பரிந்துரைகளும் இச்சட்டத்தில் இடம் பெறவில்லை. 7வது ஊதிய குழு பரிந்துரைத்த ரூ.18,000 என்பதும் புறந்தள்ளப்பட்டு தேசிய அடிமட்ட ஊதியம் ரூ.4628 என தொழிலாளர் நலத்துறை அமைச்சரால் தன்னிச்சையாக அறிவிக்கப்படுகிறது. முறைசாரா துறையில் முதலாளி, மத்திய அரசு நிர்ணயிப்பதையோ அல்லது மாநில அரசு நிர்ணயிப்பதையோ தரலாம் என்று பச்சை கொடி காட்டியிருப்பது, குறைவான கூலிக்கே இட்டு செல்லும். சில குறிப்பிட்ட மாநிலங்களில் தொழிற்சங்க இயக்கம் போராடி தியாகம் செய்து பெற்ற பலன்கள் கூட தொடர முடியாது. உதாரணமாக, கேரள அரசு ரூ.18,000 குறைந்தபட்ச ஊதியம் என்பதை சட்டரீதியாக்கியிருக்கிறது. சட்டங்களை மீறும் முதலாளிகளுக்கு அதிகமான அபராதம் விதிக்கப்படுவதற்கான சட்டமும் உள்ளது. ஆனால் அகில இந்திய சட்டம் வரும் போது, மாநில சட்டங்களை அமல்படுத்துவது மிகுந்த சிரமத்துக்குள்ளாகும்.*

*ஆளுநர்கள் அரசியல் ஆதாய கருவிகளாய்:*

மார்க்சிஸ்ட் கட்சியின் திட்டத்திலேயே ஆளுநர் நியமனம் குறித்த விமர்சனம் இருக்கிறது. மேலிருந்து தன்னிச்சையாக நியமனம் செய்வது கூட்டாட்சிக்கு முரணானது. ஒரு வேளை அப்படிப்பட்ட பதவி தேவை என்றால், மாநில முதல்வர்கள் பரிந்துரைக்கும் மூவரில் ஒருவரை குடியரசு தலைவர் தேர்வு செய்து ஆளுநராக நியமனம் செய்வது என்ற வழியைப் பின்பற்றலாம். இது சர்க்காரியா கமிஷன் பரிந்துரையிலும் இடம் பெற்றிருக்கிறது. உலக அளவில் கூட்டாட்சி அமைப்பை வைத்திருக்கும் பிரதான நாடுகள் எவற்றிலும் மத்திய அரசு ஆளுநரை நியமனம் செய்யும் முறை இல்லை. அதே போல், மாநில அரசுகள் நிறைவேற்றும் மசோதாக்கள் ஆளுநர்/குடியரசு தலைவரின் ஒப்புதலுக்கு அனுப்பப்படும் போது எல்லையற்ற காலம் அதைக் கிடப்பில் போட்டு வைப்பதானது தேர்ந்தெடுக்கப்பட்ட மாநில அரசின் பணிகளை முடக்கும் நடவடிக்கையே. எனவே, மசோதாவுக்கு ஒப்புதல் வழங்க கால நிர்ணயம் செய்ய வேண்டும் என்பதும் மார்க்சிஸ்ட் கட்சியின் பரிந்துரையாக உள்ளது. மாநிலங்களின் கவுன்சில் இதற்கான அரசியல் சட்டத்திருத்தம் வேண்டும் என்று பலமுறை விவாதித்த பிறகும், அது அமல்படுத்தப்படவில்லை. ஆளுநர்கள் பல்கலைக்கழக வேந்தர்களாக இருப்பது பற்றியும், மாநில அரசை பகிரங்கமாக விமர்சிப்பது, அவர்களின் கருத்துக்களுக்கு முரண்படுவது போன்ற அம்சங்களும் தொடர்ந்து விவாதிக்கப்பட வேண்டியிருக்கிறது. புதுவை, தமிழக ஆளுநர்களின் அணுகுமுறை இதற்கு அண்மைக்கால உதாரணமாகும்.

தேர்ந்தெடுக்கப்பட்ட அரசுகளைக் கலைப்பது, கவிழ்ப்பது மற்றும் எந்தக் கட்சியை ஆட்சி அமைக்க அழைப்பது, எப்போது அழைப்பது போன்ற அம்சங்களில் மத்திய அரசின் செயல்கருவியாக ஆளுநர் செயல்பட்டதை அருணாச்சல பிரதேசம், உத்தராகண்ட், தமிழ்நாடு, கோவா, மேகாலயா உள்ளிட்ட மாநிலங்களில் பார்த்தோம். இது இன்னும் அதிகரிக்கவே வாய்ப்புகள் உள்ளன.

### குதிரை பேரம்:

ஒரு குறிப்பிட்ட கட்சியின் சார்பில் அதன் கொள்கைகளை சொல்லி போட்டியிட்டு வெற்றி பெற்ற சட்டமன்ற உறுப்பினர்கள், இன்னொரு கட்சியால் விலைக்கு வாங்கப்படும் குதிரை பேரமானது ஜனநாயகத்தைக் கேலி

கூத்தாக்குவதாகும். மாநில மக்களின் விருப்பத்தை/முடிவை கொல்லைப்புற வழியாக தட்டிப் பறிப்பதாகும். தற்போது பாஜக ஆட்சியில், வாடிக்கையாக, அங்கீகரிக்கப்பட்ட நடவடிக்கையாக இது பெருமளவு மாறிவிட்டது. கர்நாடக மாநிலத்தில் நடந்து முடிந்த குதிரை பேரம், அடுத்து ராஜஸ்தான், மத்திய பிரதேசத்தைக் குறி வைத்து செய்யப்படுகிறது.

*மாநிலங்களுக்கு சிறப்பு அந்தஸ்து:*

11 மாநிலங்களுக்கு சிறப்பு அந்தஸ்து இந்திய அரசியல் சட்டத்தில் அளிக்கப்பட்டிருக்கிறது. முதன்முதலில் அரசியல் சாசனத்தின் ஓர் அம்சமாக ஜம்மு-காஷ்மீர் மாநிலத்துக்கு சிறப்பு அந்தஸ்து அளிக்கப்பட்டது. ஆனால் படிப்படியாக அது நீர்த்துக் கொண்டே வந்தது. அண்மை காலத்தில் மாநில அரசு கலைக்கப்பட்டு, குடியரசு தலைவரின் ஆட்சியின் கீழ் இருக்கும் ஜம்மு – காஷ்மீர் மாநிலத்துக்கு நாடாளுமன்ற தேர்தலுடன் சேர்த்து சட்டமன்ற தேர்தலும் நடத்தப்பட வேண்டும் என்று கிட்டத்தட்ட அனைத்துக் கட்சிகளும் வலியுறுத்திய பிறகும், தேர்தல் ஆணையம் முன்வரவில்லை.

தற்போது, ஒரு சில மணி நேரங்களில் நாடாளுமன்றத்தின் மூலமாக ஜம்மு காஷ்மீர் மாநிலத்தை இரண்டு யூனியன் பிரதேசங்களாகப் பிரித்து, அதன் சிறப்பு அந்தஸ்தை ரத்து செய்து, குடியரசு தலைவரின் ஒப்புதலையும் பெற்று, பல்லாண்டுகளாக அம்மாநிலம் அனுபவித்து வந்த உரிமைகளைக் குழி தோண்டிப் புதைத்து விட்டது பாஜக அரசு. இனி சிறப்பு அந்தஸ்து பெற்ற மாநிலமாக அது இருக்க முடியாது என்பது மட்டுமல்ல; மத்திய அரசின் நேரடி கட்டுப்பாட்டுக்குள் அது இயங்க வேண்டியிருக்கும். இந்து இந்தியாவில், முஸ்லீம்கள் கணிசமாக இருக்கும் மாநிலம் சிறப்பு அந்தஸ்துடன் இயங்கலாமா என்ற மதவெறி நிகழ்ச்சி நிரலோடு சேர்த்து, இனி கார்ப்பரேட்டுகளுக்கு அதன் இயற்கை வளங்களை அள்ளிக் கொடுக்க முடியும் என்பதும் உள்ளது. நாடாளுமன்றப் பெரும்பான்மையின் கொடுங்கோன்மையைப் பயன்படுத்தி ஒரு மாநிலத்தையே இந்திய வரைபடத்தில் சிதைக்க முடியும் என்றால், இனி எந்த மாநிலத்தையும் எதுவும் செய்யலாம். ஜனநாயக படுகொலை என்பதோடு சேர்த்து, இந்தியாவின் சாரமாக இருக்கும் கூட்டாட்சியை மியூசியத்தில் அடைத்து வைத்து காட்சி பொருளாக்கும் ஏற்பாடே

இது.

விடுதலை போராட்டத்தில் பங்களிப்பு செய்யாத ஆர்.எஸ்.எஸ்., காந்தி படுகொலைக்குப் பின் தடை செய்யப்பட்டு, மீண்டு வந்து, அதன் எண்ணற்ற அமைப்புகள் மூலமாக பாசிச உத்திகளைப் பயன்படுத்தி, தற்போது அரசியல் அதிகாரம் பெரும்பான்மை பலத்தோடு கைக்கு வந்த சூழலில், நாட்டின் விடுதலைக்குப் பிறகு மக்களால் தொடர்ந்து நிராகரிக்கப்பட்ட தனது நிகழ்ச்சி நிரலை ஒவ்வொன்றாக அமல்படுத்துகிறது. இதுதான் பாஜக அரசு பயணிக்கும் திசைவழியாக உள்ளது. மக்களின் மனநிலையை ஜனநாயகப்படுத்தி, போராட்ட ஒற்றுமையை ஏற்படுத்தும் பணியில் களத்திலும், கருத்தியல் தளத்திலும் முன்னிலும் வேகமாக இடதுசாரிகள் செயல்பட வேண்டிய நேரம் இது.

# 2. சாதி, வர்க்கம், இயக்கங்க

*என். குணசேகரன்*

*ஆனந்த் டெல்டும்டெவின் "சாதிக் குடியரசு" நூல், இந்திய மக்கள் எதிர்கொள்ளும் சமூக சிக்கல்கள் பற்றி ஆழமான பல கருத்துக்கள், ஏராளமான விவரங்கள் கொண்ட 400-பக்க நூலாக அமைந்துள்ளது. டெல்டும்டெவின் சிந்தனைகள் அனைத்தும் கவனத்தில் கொள்ள வேண்டியவை; விவாதத்திற்கும், விமர்சனத்திற்கும் உட்படுத்த வேண்டியவை. எனினும், முக்கிய கருத்துக்கள் சிலவற்றை மட்டும் இக்கட்டுரை விவாதிக்கிறது.*

*"சாதி, வர்க்க இயக்கவியல்: உள்ளேயும், வெளியேயும்" என்ற தலைப்பு டாக்டர் அம்பேத்கரின் ஒரு முக்கிய மேற்கோளுடன் துவங்குகிறது. "சாதி என்பது மூடப்பட்ட வர்க்கம்" என்று 1916-ம் ஆண்டு "இந்தியாவில் சாதிகள்" என்கிற நூலில் டாக்டர் அம்பேத்கர் குறிப்பிடுகிறார். அதாவது, வர்க்கத்தின் வடிவமாக சாதி உள்ளது என்று அவர் கருதினார்.*

*இன்றைய நவீன கிராம சமுதாயத்தை எடுத்துக்கொண்டால் நிலவுடைமையாளர்கள், முதலாளிகள் என்ற அதிகாரம் படைத்த வர்க்கப் பிரிவினர் ஒருபுறம்; அவர்களிடம் பல்வேறு வகைகளில் பணியாற்றும் நிலமற்ற விவசாயிகள், முறைசாராத் தொழிலாளர்கள் போன்றோர் மறுபுறம் என வர்க்க அடிப்படையில் வேறுபாடுகள் உள்ளன. ஆனால் இதை விட வெளிப்படையாக தெரிவது அந்த கிராம சமூகத்தில் நிலவும் சாதி வேறுபாடுகள் தான். எனவேதான் வர்க்கம், சமூகத்தின் உள்ளடக்கமாகவும் சாதி அதன் வெளிப்புற வடிவமாகவும் விளங்குகிறது.*

*சாதி, வர்க்க ஒடுக்குமுறை எதிர்ப்பு இரண்டும் இணைந்த போராட்டத்தில்தான் பொருளாதார சுரண்டலுக்கும் ஒடுக்கு முறைக்கும் ஆளான உழைக்கும் மக்கள் அனைவரையும் ஒன்று திரட்ட முடியும்.*

*இந்த ஒற்றுமை அம்பேத்கர் கனவு கண்ட சமத்துவ சமூகத்தை உருவாக்கிடும். அம்பேத்கரின் வர்க்கம், சாதி பற்றிய வரையறை இதனையே உணர்த்துகிறது.*

சாதி, வர்க்கம் என்ற இரண்டும் வேறுபட்டவையாக இருந்தாலும், இரண்டுக்கும் ஒற்றுமை அம்சங்களும் உண்டு என்கிறார் டெல்டும்டெ. இரண்டுக்கும் உள்ள பிணைப்பை சரியாக புரிந்து கொண்டு இயங்கும்போது, சமூக விடுதலைக்கான ஒன்றுபட்ட போராட்டத்தைக் கட்டவிழ்ப்பதற்கான வலிமை ஏற்படுவதாக அவர் கருதுகிறார்.

கம்யூனிஸ்ட் இயக்கங்கள் நீண்ட காலமாகவே ஒடுக்கப்பட்ட மக்களை சமூக, பொருளாதார அடிப்படையில் அணிதிரட்டி வந்துள்ளனர். இந்த செயல்பாட்டுக்கான வழிகாட்டுதலை மார்க்சியமே வழங்குகிறது. இதனால்தான் அம்பேத்கரும் மார்க்சியப் பார்வையில் முக்கியமான கருத்தாக்கமான "வர்க்கம்" என்கிற கருத்தாக்கத்தை சாதி பற்றிய ஆய்வுக்கு பயன்படுத்துகிறார்.

## அம்பேத்கரும் மார்க்சியமும்

மார்க்சியத்தின் மீது ஈர்ப்பு கொண்டவராக அம்பேத்கர் இருந்தார் என்பதனை டெல்டும்டெ விவரிக்கின்றார். மார்க்சியம் "....மனித உறவுகளில் உள்ள சுரண்டல் தன்மையை முன்னிலைப்படுத்தி, அதனை மாற்றுவதற்கு வழிகாட்டும் சித்தாந்தம்" என்று அம்பேத்கர் கருதியதாக டெல்டும்டெ கூறுகிறார். (பக்கம்-127)

மார்க்சின் "மூலதனம்" மராத்தியில் வெளிவந்தபோது, "கூலி, விலை, லாபம்" என்ற மார்க்சின் நூலை அவரது "ஜனதா" பத்திரிகையில் அம்பேத்கர் தொடராக பிரசுரித்துள்ளார். 1956-ம் ஆண்டில் காத்மாண்டுவில் நடந்த ஒரு கருத்தரங்கில் "புத்தரும், மார்க்ஸூம்" என்ற தலைப்பில் ஆராய்ச்சிக் கட்டுரை சமர்ப்பித்து உரையாற்றியுள்ளார். அதில் புத்தர், மார்க்ஸ் இருவரின் உலகப்பார்வையும் இலட்சியங்களும் ஒன்றே என்று பேசியுள்ளார்.

1936 ஆகஸ்ட் 15 அன்று அனைத்து உழைக்கும் மக்களையும் திரட்ட அவர் சுதந்திர தொழிலாளர் கட்சி அமைத்தார். இது, அவரிடம் வர்க்க சிந்தனை இருந்ததை எடுத்துக்காட்டுவதாக டெல்டும்டெ கருதுகிறார்.

இந்த உண்மைகளை ஆனந்த் டெல்டும்டெ எடுத்துக் கூறுவதன் நோக்கம் என்ன? மார்க்ஸ் சிந்தனையும் அம்பேத்கர் சிந்தனையும் எதிரும் புதிருமானது அல்ல என்றும், மார்க்சிய இயக்கங்களும் தலித் இயக்கங்களும் ஒருங்கிணைந்து செயல்பட

வேண்டும் என்றும் அவர் வலியுறுத்துகிறார்.

மார்க்சியம் மீது சில விமர்சனங்களும் அம்பேத்கருக்கு உண்டு என்று டெல்டும்டே குறிப்பிடுகிறார். வன்முறையையும், சர்வாதிகாரத்தையும் அது வலியுறுத்துவதாக அம்பேத்கர் கருதினார் என்று டெல்டும்டெ தெரிவிக்கின்றார்.

ஆனால், வன்முறை, சர்வாதிகாரம் இரண்டுமே ஆளும் முதலாளித்துவ வர்க்கங்களும், அவற்றின் கருவியாக செயல்பட்டு வரும் அரசும் மக்களை அடக்கி ஒடுக்கிட, மேற்கொள்ளுகிற வழிமுறைகள். இதனை மார்க்சியம் ஆழமாக விளக்குகிறது. இன்றளவும் இந்தியா உட்பட அனைத்து நாடுகளிலும் இதனை நாம் காண்கின்றோம். புரட்சிகர மாற்றம் ஏற்பட்டு, பாட்டாளி வர்க்க அரசு அமைகிற போது, பெரும்பான்மை மக்கள் அதிகாரத்தில் இருப்பதை முதலாளித்துவம் சகித்துக் கொள்வதில்லை. பாட்டாளி வர்க்கம் அதிகாரத்தில் இருப்பதை பொறுக்க முடியாத முதலாளித்துவம், மீண்டும் எதிர்ப்புரட்சி வேலைகளை செய்து உழைக்கும் மக்களின் அரசினை வீழ்த்த வன்மத்துடன் முயற்சிக்கும்.

அதனை எதிர்கொள்ள வேண்டுமானால், பாட்டாளி வர்க்க அரசு அனைத்து அதிகாரங்களையும் கொண்ட பாட்டாளி வர்க்க சர்வாதிகார அரசாக இருக்க வேண்டும் என்று மார்க்சியம் வழிகாட்டுகிறது. அந்த அரசு உண்மையில் பெரும்பான்மை உழைக்கும் மக்களின் அரசாக இருக்கும் என்பதனை மார்க்சியம் விளக்குகிறது. அந்த அரசும், அது நிர்வகிக்கும் சமூகமும், நடைமுறையில் உண்மையான மக்கள் ஜனநாயகமாகவே இருக்கும்.

மார்க்சியத்தை வன்முறை தத்துவம் என்றும், சர்வாதிகாரத் தத்துவம் என்றும் மனிதநேய சிந்தனையாளர்கள் பலரும் கூட தவறான புரிதலுக்கு ஆட்பட்டுள்ளனர். அவர்கள் மார்க்சியத்தை அதன் முழுப்பரிமாணங்களுடன் புரிந்து கொள்வதற்கு ஏற்ற வகையில் மார்க்சியம் பற்றிய முழுமையான தரவுகள், மதிப்பீடுகள் கொண்ட கருத்தியல் பிரச்சாரம் அதிகமாக தேவைப்படுகிறது.

### சுயநல அரசியலும்,சாதி ஒழிப்பும்

1936-ல் தொழிலாளர் கட்சியை அமைத்த அம்பேத்கர், அந்த வர்க்கத் திரட்டல் பணியை முதன்மைப் பணியாகத் தொடரவில்லை. 1942ல் அனைத்திந்திய

*தாழ்த்தப்பட்டோர் கூட்டமைப்பினை உருவாக்கினார். இது, வர்க்கம் என்கிற முனையிலிருந்து சாதி என்கிற முனைக்கு அவர் சென்றுவிட்டதை குறிப்பதாக டெல்டும்டெ எழுதுகிறார்.*

*அம்பேத்கர், காங்கிரஸ் ஆட்சியில் சட்ட அமைச்சராக பொறுப்பேற்றதும், பிறகு காங்கிரஸ் தலைமையால் துரோகத்திற்கு ஆளானதும் வரலாறு. இவற்றை விளக்கும் டெல்டும்டெ பாஜக, காங்கிரஸ் இரண்டுமே தலித் மக்களுக்கு துரோகம் இழைக்கும் கட்சிகளென ஆதாரங்களுடன் எடுத்துரைக்கிறார்.*

*ஆனால் அந்தக் கட்சிகளோடு, அம்பேத்கர் பெயரை உச்சரித்துக் கொண்டு அரசியல் செல்வாக்கை தேடிக் கொண்ட பலர், சுயநல அரசியலை நடத்தி வருகிற நிலையையும் டெல்டும்டெ அம்பலப்படுத்துகிறார்.*

*இதற்கு தலித்துகளான 'ராம்கள்' சிலரை எடுத்துக்காட்டாக முன்வைத்து பேசுகிறார். ராம்தாஸ் அத்வாலே செல்வாக்கு பெற்ற பெரும் கோடீஸ்வரராக ஆன வரலாற்றை குறிப்பிடுகிறார். முதலில் தேசியவாத காங்கிரஸ்-காங்கிரஸ் கூட்டணி அரசில் அமைச்சராகவும், பிறகு பாஜக அரசில் அமைச்சராகவும் அவர் இருந்தார். அதேபோன்று ராம் விலாஸ் பஸ்வான், காங்கிரஸ் தலைமையிலான கூட்டணி அரசிலும் பாஜக தலைமையிலான கூட்டணி அரசிலும் தொடர்ச்சியாக ஐந்து முறை மத்திய அமைச்சராக பதவியில் இருந்து வருகிறார். இவர்களை விட பலமடங்கு சுயநல அரசியலும், ஊழல் சாம்ராஜ்யத்தை நடத்தி வருகிற பலர், பல முதலாளித்துவ கட்சிகளில் இருந்து வருகின்றனர் என்பது உண்மையே. ஆனால் சாதி ஒழிப்பு லட்சியத்திற்காக வாழ்க்கையைத் துவங்குகிற பலர் தடம் மாறி போகிறபோது, அந்த லட்சியத்திற்கு பாதிப்பு ஏற்படுகிறது.*

*தற்போதைய நிலையில் அம்பேத்கரைப் பின்பற்றுவோரும் கூட அம்பேத்கரின் பார்வையை நடைமுறையில் பின்பற்றுவதில்லை. சாதி ஒழிப்பு இலட்சியம் சாத்தியமில்லை என்று அவர்கள் கருதுகின்றனர். அம்பேத்கர் பெயரை உச்சரிக்கும் வேறு சிலர் இந்துத்துவா மற்றும் நவீன தாராளமய விஷ கருத்தியலுக்கு ஆளாகி உள்ளனர். எனவே சாதி ஒழிப்பு நிகழ்வு மெதுவாகவே நடக்கும் என்று விளக்கும் டெல்டும்டெ, அந்த குறிக்கோள் வர்க்க ஒற்றுமை போராட்டங்களின் வழியாகத்தான் சாத்தியமாகும் என்கிறார். (பக்கம் 179). இந்த கருத்திற்கும், கம்யூனிஸ்டுகளின்*

*பார்வைக்கும் பெரிய வேறுபாடு இல்லை.*

*சங்கப் பரிவாரம் விடுக்கும் சவால் உள்ளிட்ட அனைத்தையும் எதிர்கொள்ள, "சாதி உணர்வு வேரறுக்கப்பட வேண்டும்" என்கிறார் டெல்டும்டெ. இதற்கு "சாதி அடுக்கில் நிறுத்தப்பட்டிருக்கும் சாதிகளின் அடையாள உணர்வுகள் அழிக்கப்பட வேண்டும்" என்கிறார். அதாவது, "சாதி ஒழிக்கப்படுதலே சரியான தீர்வாக அமையும்" என்கிறார். இது கரடு முரடான, நீண்ட கால பாதையாக இருக்கலாம். இதற்கு சரியான அணுகுமுறை தேவை. சாதி ஒழிப்பை சாதிக்க, தலித் மக்கள் வர்க்க நிலைமைகள், வர்க்க கருத்து நிலைகளில் நின்று சமூகத்தை அணுக வேண்டும்; தலித்துக்களைப் போன்றே கிராமப்புற அதிகார வர்க்கங்களிடம் அடிமைப்பட்டுக் கிடக்கும் தலித் அல்லாதவர்களோடு நெருக்கம் ஏற்பட இந்த அணுகுமுறையே சிறந்த வழி என்கிறார் டெல்டும்டெ. இது சாதி ஒழிப்பில் முன்னேறிட உதவிடும்.*

*சங்பரிவாரங்களின் திட்டம்*

*தலித் மக்களை தங்கள் பிடியில் வென்றெடுப்பது என்பது சங்பரிவாரத்தின் ஒரு நயவஞ்சகமான திட்டம்.*

*இந்துக்களுக்கு எதிராக இஸ்லாமியர்கள், கிறிஸ்துவர்கள், கம்யூனிஸ்டுகளை முன்னிறுத்தி, சமூகத்தில் பிளவை ஏற்படுத்துவது இந்துத்துவாவின் குறிக்கோள். இதனை அடைவதற்கான அவர்களது திட்டத்திற்கு, தலித்துகள் தடையாக இருப்பார்கள் என்கிற அச்சம் எப்போதுமே அவர்களுக்கு உண்டு.*

*வேறுபட்ட நம்பிக்கைகள், கடவுளர்கள், சடங்குகள் என பல்வேறு பிரிவினரை இந்து என்கிற ஒற்றை மத அடையாளத்தின் கீழ் கொண்டுவர இந்துத்துவா முயற்சிக்கிறது. இதற்காக பல பிரிவினரின் பன்முகத் தன்மைகளை அழிக்கும் பண்பாட்டு அழிப்பினை அவர்கள் செய்து வருகின்றனர். தலித் மக்களை இந்து என்ற ஒற்றை மத அடையாளத்தின் கீழ் கொண்டுவருவது சாத்தியமில்லை. ஏனெனில், இந்து மதத்தில் நால் வருணம் என்கிற ஒடுக்குமுறை கோட்பாடு, காலம் காலமாக, அவர்கள் மீது திணிக்கப்பட்டு, தீண்டாமை உள்ளிட்ட கொடுமைகளுக்கு அவர்கள் ஆளாகி வருகின்றனர். இந்த நிலையை எதிர்கொண்டு தலித் மக்கள் மத்தியில் இந்து மத ஒற்றை அடையாளத்தை ஏற்படுத்த சங்பரிவாரம் பெரு முயற்சி*

*செய்கிறது. அம்பேத்கரையும் காவி மயமாக்க அவர்கள் படாதபாடு படுகிறார்கள். அம்பேத்கர் இந்து மதத்தை முழுமையாக நிராகரித்தவர் என்கிற உண்மையை மறைத்து, அம்பேத்கரை சித்தாந்த ரீதியாக கடத்திட முயற்சிக்கிறார்கள். தலித் இயக்கத்தில் உள்ள நடுத்தர வர்க்கத்தினர் சிலரின் சுயநலமும், சங்பரிவாரத்தின் இந்த சதித் திட்டத்திற்கு துணையாக இருக்கிறது என்பதை டெல்டும்டெ அழுத்தமாக குறிப்பிடுகிறார்.( பக்கம் 265)*

*பாஜகவிற்கு தலித் மக்கள் மீது எந்தப் பாசமும் இல்லை. பாஜக ஆட்சியில் தலித் மக்கள் மீதான தாக்குதல்கள் ஒவ்வொரு நாளும் சராசரியாக 111 என்ற எண்ணிக்கையில் நடந்து வருவதை சுட்டிக் காட்டும் டெல்டும்டெ "ஆளும் வர்க்கங்களின் நலன்கள் தற்போதைய சாதிப் பிளவுகளை பாதுகாப்பதில்தான் உள்ளது. இந்த ஆளும் வர்க்கங்களின் தேவைகளுக்கு ஏற்ப அரசும் செயல்படுகிறது" என்கிறார். எனவே, பாஜக தலைமை தாங்கும் அரசினை எதிர்த்தால் மட்டும் போதாது. எதிர்காலப் பார்வை முன்வைக்கப்பட வேண்டும். முதலாளித்துவ அரசினை அகற்றி, உழைக்கும் வர்க்கங்கள் அதிகாரத்தைக் கைப்பற்றுகிற மாற்று நிகழ்ச்சி நிரல் அவசியம்.*

### *சாதி ஒழிப்பில் நிலப் பிரச்சனை*

*தலித் விடுதலை பற்றி பேசுகிறவர்கள் நிலப் பிரச்சனை பற்றி அதிகம் பேசுவதில்லை. டெல்டும்டெ தலித் விடுதலைக்கு நிலவுடைமை உறவுகளில் மாற்றத்தை ஏற்படுத்துவது மிக முக்கியமானது என்று எழுதுகிறார். "மக்கள் தொகை அடிப்படையில் பார்த்தால், 80 சதவீதத்திற்கும் மேற்பட்ட தலித் மக்கள் பெரும்பாலும் கிராமப்புறங்களில் வாழ்கின்றனர். வேகமாக நிகழும் நகரமயத்தில், தலித் அல்லாதவர்கள் நகர்ப்புறங்களுக்கு குடியேறுகிற அளவில் பாதி அளவிற்கு மட்டுமே நகரங்களுக்கு செல்லும் தலித் மக்களின் எண்ணிக்கை உள்ளது. இந்நிலையில் தலித் விடுதலை குறிக்கோளினை அடைந்திட, நிலம் மிக முக்கியமான பங்கினை வகிக்கிறது." (பக்கம் 211). இதனையொட்டி அம்பேத்கர் 1929-ம் ஆண்டில் மகாராஷ்டிரா கொங்கண் பகுதியில்ந டத்திய நிலப்பிரபுத்துவ எதிர்ப்புப் போராட்டத்தை டெல்டும்டெ குறிப்பிடுகிறார்.*

*கம்யூனிஸ்டுகள் நீண்டகாலமாக நிலப்பிரபுத்துவ எதிர்ப்புப் போராட்டங்களை*

நடத்தி வந்துள்ளனர். டெல்டும்டெ இந்த பங்களிப்பை விரிவாக எழுதவில்லை என்றாலும், நிலத்துக்கான போராட்டம் கம்யூனிச இயக்கத்தின் பிரிக்க முடியாத நிகழ்ச்சி நிரலாக இருந்து வந்துள்ளது. அந்த வகையில் தலித் விடுதலைக்கு கம்யூனிஸ்டுகள் ஆற்றிய பங்கு மிக முக்கியமானது. எதிர்வரும் காலங்களிலும் புதிய சூழலுக்கு ஏற்றவகையில் நிலப் போராட்டம் முன்னெடுத்துச் செல்ல வேண்டியது அவசியமானது. இது விவசாயப் பகுதியினரை திரட்டி நகர்ப்புற உழைக்கும் வர்க்கங்களோடு ஒற்றுமை காண வழிவகுக்கும். இந்த வர்க்க ஒற்றுமையைக் கட்டுவது, சாதி ஒழிப்பில் முக்கிய கடமையாக அமைந்துள்ளது.

### கம்யூனிஸ்டுகள் மீது அவதூறு

எவ்வித அடிப்படையும் இல்லாமல் கம்யூனிஸ்டுகள் மீது ஏற்கெனவே உலா வந்து கொண்டிருக்கின்ற பல அவதூறுகளையும் ஆங்காங்கே டெல்டும்டெ பதிவு செய்துள்ளார். ‘‘வறட்டு தத்துவவாதிகள்’’ என்று கம்யூனிஸ்ட்களை தூற்றுகிறார். சாதி – வர்க்க உறவுகள் பற்றிய ‘‘தத்துவார்த்த பற்றாக்குறை’’ இடதுசாரி இயக்கங்களிடம் இருப்பதாக அவர் குறிப்பிடுகிறார். அவரது அறிவியல் சார்ந்த சிந்தனைக்கு பொருத்தமற்ற வகையில் இக்கருத்துக்கள் வெளிப்படுத்தப்படுகின்றன. தலித் இயக்கங்கள் ‘சாதி மட்டும் பார்க்கிறார்கள்; கம்யூனிஸ்டுகள், வர்க்கம் மட்டும் பார்க்கிறார்கள்’ என்று சூத்திரம் போன்று டெல்டும்டெ எழுதுகிறார். ‘இதனால் இரண்டு இயக்கங்களும் மக்களிடமிருந்து தனிமைப்பட்டு வருகின்றன’ என்கிறார். தலித் இயக்கங்களின் கருத்து நிலைகள், செயல்பாடுகள், நோக்கங்கள் பலவற்றை அவரே விமர்சித்திருக்கிறார்.

ஆனால், மார்க்சிய இயக்கம் வர்க்கம் மட்டும் பார்ப்பது உண்மையல்ல என்பது மட்டுமல்ல; உண்மையான மார்க்சிய செயல்பாடு சாதியை தவிர்த்து வர்க்கம் மட்டும் பார்ப்பதாக இருக்க இயலாது. ஒரு கிராமத்தில் நிலப்பிரச்னைக்கு விவசாயிகளை திரட்டும் பணியில் ஈடுபட்டு, வர்க்க ஒற்றுமைக்கு முயல்கின்ற ஒரு கம்யூனிஸ்ட், சாதி சவாலை எதிர்கொள்ளாமல் வர்க்க ஒற்றுமையை உருவாக்க இயலாது. உள்ளூர் மக்களிடம் ஒடுக்குமுறை உறவுகளுக்கு எதிராகவும், சாதிய மனப்பான்மையை கைவிடவும் கருத்துப் பிரச்சாரத்தை மேற்கொள்ளாமல் உண்மையான வர்க்க ஒற்றுமை உள்ளூரில் சாத்தியமாகாது. இதை நடைமுறைப்படுத்துகிறபோது

சில தவறுகள் ஏற்படும் வாய்ப்புகள் உள்ளன. வாழ்வாதார, பொருளியல் பிரச்சினைகளில் அதிக கவனம் செலுத்துகிற நிலையில், சமூகரீதியில் உள்ள ஒடுக்குமுறை பிரச்சனைகள் மீது உரிய கவனம் செலுத்தாத போக்கு ஏற்படுகிறது. இது உண்மையான, மார்க்சிய தத்துவ நடைமுறை அல்ல. மார்க்சிய அடிப்படையில் சமூக கட்டமைப்பை பார்ப்பதில் உள்ள சரியான மார்க்சிய புரிதலை ஏற்படுத்தி, இதனை அவ்வப்போது சரி செய்திட வேண்டும். பல தலித் இயக்கங்களோடு இணைந்து கம்யூனிஸ்டுகள் தொடர்ந்து போராட்டங்களை நடத்தி வருகின்றனர். கடந்த பல ஆண்டுகளாக பல மாநிலங்களில், குறிப்பாக, தமிழ்நாடு, ஆந்திரா மாநிலங்களில் கூட்டாக தீண்டாமை ஒழிப்பு முன்னணி அமைத்து செயல்பட்டு வருகின்றனர். தலித் மக்களுக்கான உரிமைகளை நிலைநாட்டி உள்ளனர்.

இவ்வாறு தீவிரமான செயல்பாடுகள் மேற்கொண்ட போதிலும், பல அறிவுஜீவிகள் கம்யூனிஸ்டுகளுக்கு ‘வர்க்கம் மட்டுமே தெரியும்; சாதி பற்றி அவர்களுக்கு தெரியாது’ என்ற அவதூறுப் பிரச்சாரத்தை நிறுத்தவில்லை. கம்யூனிஸ்டுகள் ஒடுக்கப்பட்ட மக்களிடையே வேரூன்றுவதை அவர்கள் விரும்பவில்லை; அது மட்டுமல்ல; தலித் மக்கள் பரந்த அளவில் சுரண்டப்படும் வர்க்கங்களோடு இணைந்து போராடுவதையும் அவர்கள் விரும்பவில்லை; வர்க்க ஒற்றுமை உருவாகி, சுரண்டலுக்கே முற்றுப்புள்ளி வைக்கும் சோஷலிச பாதையில் தலித்துக்கள் செல்வதை தடுக்கும் உள்நோக்கமும் அவர்களில் பலருக்கு உண்டு.

சாதியைப் பற்றி சரியாகப் புரிந்து கொள்வதற்கு மார்க்சிய அணுகுமுறை உதவுகிறது. பொருளியல் தளத்தில் எவ்வாறு உழைப்புச் சுரண்டல் நடக்கிறது என்பதனையும், சாதி அடுக்கில் அடித்தட்டில் இருக்கிற தலித், பிற்பட்ட உழைக்கும் மக்கள் எவ்வாறு கடும் உழைப்புச் சுரண்டலுக்கு ஆளாகிக் கொண்டிருக்கிறார்கள் என்பதை புரிந்துகொள்ளவும், மாற்றத்துக்கான சரியான செயல்பாட்டிற்கும் மார்க்சியமே வழிகாட்டுகிறது. அதேபோன்று, மக்களின் சுரண்டல் வாழ்க்கை நிலைமைகளை மறைப்பதற்கும், மறப்பதற்கும், சாதி, மதம் இரண்டுமே பயன்படுத்தப்படுகின்றன. உழைக்கும் மக்களை ஆதிக்க வர்க்கங்களின் சுரண்டலுக்கு உட்படுத்தி, கேள்வி கேட்காமல் அடிமை வாழ்க்கையில் உழல்வதற்கான சிந்தனைகளை சாதி, மத சிந்தனைகள் ஏற்படுத்துகின்றன. ஆளும் வர்க்கத்தின் கருவிகளாக இவை செயல்படுவதை மார்க்சிய ஆய்வுமுறை

*மூலமாகத்தான் துல்லியமாக புரிந்து கொள்ள முடியும்.*

*தீண்டாமை ஒழிப்பு, சாதி ஒழிப்பு என்று அவ்வப்போது சில நடவடிக்கைகளை எடுத்தால் மட்டும் சாதி ஒடுக்குமுறை சார்ந்த சமூக அடுக்கினை அகற்றிட முடியாது. வர்க்க நிலைமைகளையும் சாதிய ஒடுக்குமுறை உறவுகளையும் சரியாக கணித்து சரியான செயல்பாட்டு வியூகங்களை அமைத்து செயல்படுவதன் வழியாகத்தான் சாதி ஒழிப்பிலும் முன்னேற முடியும். வர்க்க விடுதலை சாதிக்க முடியும். இதுவே கம்யூனிஸ்டுகளின் கடந்தகால அனுபவமாகவும் இருந்துள்ளது. கேரள சமூகமும், தமிழகத்தில் கம்யூனிஸ்டுகள் ஓரளவு வலுவாக ஆதரவு தளம் பதித்த கீழத்தஞ்சை பகுதியிலும் இந்த வரலாற்று அனுபவங்கள் ஏராளமாக உள்ளன. இந்த வரலாற்றை டெல்டும்டெ அங்கீகரித்ததாக தெரியவில்லை. வர்க்க ஒற்றுமையை கட்ட வேண்டும் என்று வலியுறுத்தும் டெல்டும்டேவின் பார்வையை நடைமுறைப்படுத்தவும் கூட கம்யூனிஸ்டு இயக்கங்களின் சாதி ஒடுக்குமுறை எதிர்ப்பு வரலாற்றையும் அவற்றின் அனுபவங்களையும் கற்பது அவசியமாகிறது.*

### *தலித் எழுச்சி*

*1990களில் அதிக அளவில் தலித் இயக்கங்கள் உருவான சூழலில், மார்க்சிஸ்ட் கட்சி தலித் இயக்கங்களின் புத்தெழுச்சியை வரவேற்றது. அதனை ஒடுக்குமுறைக்கு எதிரான எழுச்சியாகவே மார்க்சிஸ்ட் கட்சி கணித்தது. அந்த எழுச்சியை வரவேற்பது மட்டுமல்லாமல், அவர்களோடு இணைந்து, களத்தில் ஏராளமான கூட்டு இயக்கங்களை மார்க்சிஸ்ட் கட்சி முன்னெடுத்து வருகிறது.*

*'சாதிகள் ஒருவகையில் வர்க்கத்தின் ஒரு வடிவமாகவே இந்தியாவில் உள்ளன; வர்க்கங்கள் சாதிகளுக்குள் உட்புகுந்து இருப்பதை காணமுடியும்' என்பது அம்பேத்கரின் கருத்து. அதே கோணத்தில் டெல்டும்டெ சாதிக்கும் வர்க்கத்திற்கும் உள்ள உறவினை விளக்குகிறார். வர்க்கம் என்றால் மார்க்ஸையும், சாதி என்றால் அம்பேத்கரையும் பிரித்துக் காண்பது சில அறிவு ஜீவிகள் மேற்கொள்ளும் வீணான வேலை என்று டெல்டும்டெ கருதுகிறார்.*

*சாதி, வர்க்கம் இரண்டையும் பிரித்துப் பார்க்கிற தவறினை உண்மையான மார்க்சியம் செய்வதில்லை. ஆனால் 'இந்த இரண்டையும் பிரித்துப் பார்க்கிற*

தவறுகளை தலித் இயக்கங்களும், மார்க்சிய இயக்கங்களும் செய்ததால், இரண்டுமே பின்னடைவுக்கு சென்றுவிட்டது 'என்று டெல்டும்டெ கருதுகிறார். வழக்கமாக பலர் மார்க்சியத்தை தூற்றுகிற அதே பாணியில் இக்கருத்தினை டெல்டும்டெ வெளிப்படுத்துகிறார்.

மார்க்சியம் ஒரு சமூகத்தை துல்லியமாக ஆய்வு செய்திட வழிகாட்டுகிறது. அந்த சமூகத்தில் வாழும் மக்கள் தங்களது வாழ்க்கையின் தேவைகளை நிறைவேற்றிக்கொள்ள உற்பத்தியில் ஈடுபட வேண்டிய கட்டாயம் உள்ளது. அந்த வகையில் பொருளாதாரம் அடிப்படையாக அமைந்துள்ளது. அந்த பொருளாதார இயக்கத்தில் நிலம் உள்ளிட்ட உற்பத்தி சாதனங்களின் உடைமையாளர்கள், அதில் உடைமை ஏதும் இல்லாமல் உழைப்பு மட்டும் செலுத்துவோர் என்று பிரிவுகள் ஏற்படுகின்றன. இந்த உற்பத்தி சார்ந்த உறவுகளின் அடிப்படையில் தான் வர்க்கங்கள் உருவாகின்றன. சொத்துடைமை வர்க்கங்கள், உழைப்பு சக்தியை மட்டுமே நம்பி இருக்கிற உடைமையற்ற வர்க்கங்கள் என்ற இரண்டு முக்கிய பிரிவுகள் சமூகத்தில் ஏற்படுகிறது. இரண்டு வர்க்கங்களும் வெவ்வேறான நலன்களை கொண்டதாக உள்ளன.

இந்த இரண்டு வர்க்கப் பிரிவினர் சாதிகளாகவும் பிரிந்துள்ளனர். உழைக்கும் வர்க்கங்களாக இருந்தாலும், சாதி என்கிற சமூக அடுக்கு, கருத்து ரீதியாக அவர்களை ஒன்று சேர விடாமல் தடுக்கிறது. உழைக்கும் வர்க்கங்கள் சாதிகளாக பிரிந்திருப்பதும் தலித் மக்களை, தலித் அல்லாத சாதியினர் பகைமையோடு அணுகுவதும் சாதிச் சிந்தனையின் விளைவு. இது, சுரண்டப்படுகின்ற மக்களிடம் வர்க்க ஒற்றுமை ஏற்படுவதை தடுக்கிறது. இதனால் ஆளும் வர்க்கங்கள் பலனடைகின்றன. சாதி பற்றி மார்க்சிய வழியில் ஆராய்வதே சரியான பாதைக்கு வழிவகுக்கும். இன்றைய முதலாளித்துவ நிலப்பிரபுத்துவ சமூக உறவுகளில் உள்ள அநீதியான ஒடுக்குமுறை நிலைமைகளை மாற்றியமைத்து சமத்துவத்தை அடைய மார்க்சியம் வழிகாட்டுகிறது.

ஆக, டெல்டும்டெவின் கருத்துக்களும், கள அனுபவங்களும் கீழ்க்கண்ட முடிவுகளுக்கு இட்டுச் செல்கின்றன.

முதலாளித்துவத்தை தூக்கி எறியும் நிகழ்ச்சி நிரல் இல்லாமல்,சாதி ஒழிப்புக்

குறிக்கோள் நிறைவேறாது. ஆனால் இவை இரண்டுமே தானாக அழிந்து போகாது. முதலாளித்துவத்தையும், சாதி கருத்து நிலைகளையும் அழிப்பதற்கான களப்போராட்டங்கள், கருத்தியல் முயற்சிகள் இடைவிடாது நடந்தால்தான் இரண்டையும், மரணப்படுக்கையில் தள்ளிட முடியும். இதனை அனைத்துப் பகுதியினரையும் உள்ளடக்கிய பாட்டாளிவர்க்கத்தின் உறுதியான, ஒன்றுபட்ட நடவடிக்கைகளே சாதிக்கும்.

# 3. உள்ளிருந்தே கைப்பற்றப்பட்ட அரசு அய்ஜாஸ் அகமத் – உடன் ஓர் உரையாடல்

*ஜிப்ஸன் ஜான், ஜிதேஷ், எ.எம்*

*தமிழில்: வீ.பா. கணேசன்*

இந்தியாவைச் சேர்ந்த மார்க்சிய சிந்தனையாளரான அய்ஜாஸ் அகமத் நவீன வரலாறு, அரசியல், கலாச்சாரம் ஆகியவை குறித்த கொள்கைகளுக்கான நிபுணராக சர்வதேச அளவில் புகழ்பெற்றவர். இந்தியா, கனடா, அமெரிக்கா ஆகிய நாடுகளின் பல்கலைக் கழகங்களில் பேராசிரியராக பணியாற்றிய அவர், தற்போது இர்வைன் பகுதியில் உள்ள கலிஃபோர்னியா பல்கலைக்கழகத்தின் ஒப்பியல் இலக்கியத் துறையில் மதிப்புமிகு பேராசிரியராக விமர்சனக் கொள்கையை பயிற்றுவித்து வருகிறார்.

இந்துத்துவ வகுப்புவாதம், பாசிஸம், மதச்சார்பபின்மை, இந்தியப் பின்னணியில் இடதுசாரிகளின் எதிர்காலத்திற்கான வாய்ப்புகள் குறித்த கேள்விகளே இந்தப் பேட்டியில் பெரும் பகுதியாக எழுப்பப்பட்டன. மற்ற பகுதிகளில் உலகமயமாக்கல், உலகளாவிய அளவில் இடதுசாரிகளுக்கான வாய்ப்புகள், அண்டோனியோ க்ராம்சியின் சிந்தனைகளை சரியாகவும், தவறாகவும் பயன்படுத்துவது, இன்றைய சூழலில் கார்ல் மார்க்சின் சிந்தனைகளின் பொருத்தப்பாடு ஆகியவை குறித்த தனது கருத்துக்களையும் அவர் தெரிவித்துள்ளார். சமீபத்தில் நடந்து முடிந்த நாடாளுமன்றப் பொதுத்தேர்தலுக்கு முன்பாக இந்தப் பேட்டி நடத்தப்பட்டு, தேர்தல் முடிவுகளுக்குப் பின்னர் மேம்படுத்தப்பட்டது.

ஆர்.எஸ்.எஸ்-ம் பாஜக உள்ளிட்ட அதன் பரிவாரங்களும் மிகவும் தனித்துவமான முறையில் பாசிஸ தன்மைகளை வெளிப்படுத்துகின்றன எனவும் அய்ஜாஸ் அகமத் வாதிடுகிறார். எனினும் இந்தியாவின் தாராளவாத நிறுவனங்கள் தற்போது வெற்றுக் கூடுகளாக மாறிவிட்டபோதிலும், இந்திய அரசு இன்னமும் தாராளவாத முறைமையின் அடிப்படையில்தான் தொடர்ந்து செயல்பட்டு வருகிறது. தனித்துவமான தத்துவார்த்த நிலைபாட்டின் அடிப்படையில்தான்

*இந்தக் கருத்தாக்கத்தை அவர் முன்வைக்கிறார்.*

*ஜனநாயகத்திற்கும் தாராளவாதத்திற்கும் இடையில் அடிப்படையான முரண்பாடு நிலவுகிறது என்றும் அய்ஜாஸ் அகமத் நம்புகிறார். எனினும் அதீத வலதுசாரிகளுக்கும் அரசின் தாராளவாத நிறுவன வடிவத்திற்கும் இடையே அத்தகைய முரண்பாடு எதுவும் நிலவவில்லை என்றும் அவர் குறிப்பிடுகிறார். இத்தகைய தாராளவாதம்தான் ஜனநாயகத்தை பலவீனப்படுத்தி அதீத வலதுசாரிகளை வலுப்படுத்துகிறது. எனவேதான் அமெரிக்கா, இஸ்ரேல், துருக்கி, இந்தியா போன்ற பலவகையான உலக நாடுகளிலும் அதீத வலதுசாரி சக்திகள் தாராளவாத நிறுவனங்களின் மூலமாக ஆட்சி செலுத்தவும் முடிகிறது.*

*பாசிஸம் குறித்த கேள்வியை இருவேறுபட்ட சிந்தனைச் சட்டகத்தில் இருந்து பார்க்க வேண்டும் என்றும், பெரும்பாலான நேரங்களில் இந்தச் சட்டகங்கள் ஒன்றோடு ஒன்று குழப்பிக் கொள்ளப்படுகின்றன என்றும் அவர் நம்புகிறார். அவற்றில் ஒரு சிந்தனைச் சட்டகத்தில் இருந்து பார்க்கும்போது ஏகாதிபத்திய சகாப்தம் முழுவதிலும் முதலாளித்துவ அரசியலின் அனைத்து வடிவங்களிலுமே பாசிஸம் என்ற போக்கு நிரந்தரமான உள்ளீடாக இருந்து வருவதைக் காண முடியும். உதாரணமாக, தாராளவாத/ நவதாராளவாத முதலாளித்துவத்தின் ஆட்சியில் பாசிஸ போக்குகளை வெளிப்படுத்தி வரும் எண்ணற்ற அரசியல் கட்சிகள் ஐரோப்பா கண்டம் முழுவதிலுமே மிக இயல்பாக செயல்பட்டு வருவதைக் காண முடியும்.*

*எனினும் மேலே சொல்லப்பட்ட சிந்தனைச் சட்டகத்தின் குறுகிய பார்வையில் பார்க்கும்போது போர்களுக்கு இடையிலான காலப்பகுதியில், பிரத்தியேகமான சூழ்நிலைகளில், ஜெர்மனி, இத்தாலி, ஸ்பெயின் போன்ற நாடுகளில் முழுமையான பாசிஸ அரசுகளும் இயக்கங்களும் எழுச்சி பெற்றன. இதற்கு அந்த நாடுகளில் நிலவிய வர்க்க சக்திகளின் பலாபலன் அத்தகையதாக இருந்தது. மூலதனத்தின் ஆட்சியை அச்சுறுத்தி வந்த மிக வலுவான புரட்சிகரமான தொழிலாளி வர்க்க இயக்கங்களுக்கு எதிராக வன்முறையை கட்டவிழ்த்து விட, அரசின் தாராளவாத வடிவத்தை அகற்ற வேண்டியது அவசியமாக இருந்தது. கிட்டத்தட்ட ஒரு நூற்றாண்டு காலத்தில் வேறெந்த காலகட்டத்தையும் விட இன்று தொழிலாளி வர்க்க இயக்கங்கள் மிகவும் பலவீனமானவையாக உள்ள நிலையில் ஒரு பாசிஸ*

*ஒழுங்குமுறை தேவையற்றதாக உள்ளது. இத்தகைய சூழலில் நரக வேதனையைத் தழுவியபடி அதீத வலதுசாரிகளும் தாராளவாத அமைப்புகளும் ஒன்றாக இருக்க முடியும்.*

*கேள்வி: மே 2019 தேர்தலில் நரேந்திர மோடி மீண்டும் மக்களின் ஒப்புதலைப் பெற்றிருக்கிறார். அவர் திரும்பவும் ஆட்சிக்கு வந்திருப்பதை நீங்கள் எப்படிப் பார்க்கிறீர்கள்? வரலாற்றுச் சிறப்பு மிக்க வெற்றியுடன் பாஜக மீண்டும் ஆட்சிக்கு வருவதற்கான முக்கிய அம்சங்கள் என்ன? ஆர்.எஸ்.எஸ்.-பாஜகவின் இரண்டாவது முறை ஆட்சியின் கீழ் இந்தியாவின் எதிர்காலம் எத்தகையதாக இருக்கும் என்று நீங்கள் கருதுகிறீர்கள்?*

*நரேந்திர மோடியின் தலைமையில் நிச்சயமாக பாஜக மிகப்பெரும் தேர்தல் வெற்றியைப் பெற்றுள்ளது. 'மக்கள் தீர்ப்பு' என்று இதைச் சொல்லமுடியுமா என்பதும் கூட சந்தேகத்திற்குரிய ஒன்றுதான். மக்கள் தங்கள் தீர்ப்பைச் சொல்லவேண்டுமானால், உண்மைகளின் அடிப்படையிலான, அறிவுபூர்வமான, அரசியல் விவாதம் மக்களுக்குத் தேவைப்படுகிறது. அதைப் போன்றே எதிர்க்கட்சிகள் தங்களது மாற்றுக் கொள்கைகளை மக்களிடையே தெளிவாக எடுத்துரைப்பதற்கான அமைதியான, தெளிவான சூழலும் தேவைப்படுகிறது. அரசியல் கட்சிகள் உண்மைகளின் அடிப்படையில் அறிவுபூர்வமான மாற்றுக் கருத்துக்களை முன்வைக்க முடிந்தாலும் கூட, அவை மக்களிடம் சென்று சேரும் வாய்ப்பு இன்று இல்லை. ஏனெனில், இந்திய பெரு நிறுவனங்களின் பிடியிலுள்ள ஊடகமானது கிட்டத்தட்ட சங் பரிவார இயந்திரத்தோடு ஐக்கியமான ஒன்றாக மாறிவிட்டதோடு, உண்மைகளையும் கொள்கைகளையும் எவ்வித மாச்சரியமும் இன்றி வெளியிடுவது; மக்கள் நலனுக்கு உகந்த வகையில் செயல்படுவது என்ற தனது தொழில்முறை உறுதிப்பாட்டை இழந்துபோனதாகவும் மாறியுள்ளது. மக்கள் தங்கள் தீர்ப்பைத் தர முடிகின்ற ஜனநாயக பூர்வமான செயல்பாட்டிற்கு இதில் தொடர்புடைய, அனைத்து அமைப்புகளும், குறிப்பாக தேர்தல் ஆணையம், உயர்மட்ட நீதித்துறை, சட்டத்தை அமலாக்கும் அமைப்புகள் போன்றவை, நீதிநெறி முறைகளை, அரசியல் அமைப்புச் சட்ட மற்றும் சட்டரீதியான நெறிமுறைகளை, கறாராகக் கடைப்பிடிப்பனவாக இருக்க வேண்டும். ஆனால் நிலைமை அவ்வாறு இல்லை என்பது தான் உண்மை. இந்திய அரசியல் தளம் மிகவும் குறிப்பிடத்தக்க*

*வகையில் ஜனநாயக நெறிமுறைகளை மிகுந்த உறுதியோடு கடைப்பிடித்த ஒரு காலமும் இருந்தது. எனினும் அத்தகைய மக்கள் திரள் கடந்த சில தசாப்தங்களாக இந்தியாவில் பெரும் போராட்டத்தை நடத்தி வருவதோடு, ஆண்டுகள் செல்லச் செல்ல மேலும் மேலும் அதிகமான வகையில் ஊழல்மிக்கதாக மாறி வருகிறது. "ஊழல் மிக்கதாக" என்பதை தேர்தலில் மிகப் பிரம்மாண்டமான வகையில் பணத்தைப் பயன்படுத்துவது என்ற பொருளில் மட்டுமே நான் குறிப்பிடவில்லை; தேர்தல் முடிவுகளைத் தீர்மானிப்பதில் அது மிக முக்கியமான ஓர் அம்சமாக இருக்கிறது என்பதும் உண்மை தான். எனினும் ஜனநாயகச் செயல்பாடு என்ற குறிப்பிடக்கூடிய செயல்பாட்டில் ஏற்பட்டுள்ள ஒட்டுமொத்த சீரழிவையே நான் அவ்விதம் குறிப்பிடுகிறேன். 2019 தேர்தல் முடிவுகள் தேர்தல் வெற்றியின் அளவுக்கும் ஜனநாயக ரீதியான அடிப்படை நெறிமுறைகள் என்பதற்கும் இடையேயான உறவுகள் முற்றிலுமாக மறைந்து போன ஒரு கட்டத்தை நாம் எட்டியிருக்கிறோம் என்பதை எடுத்துக் காட்டுவதாகவே தோன்றுகிறது.*

*மிகுந்த ஆச்சரியமூட்டும் வகையில் இந்திய அரசியல் அமெரிக்க மயமாகியுள்ளது. ஒரு புறத்தில் வழிகாட்டியும் பாதுகாவலருமாகத் தோற்றமளிக்கும் மகத்தான தலைவர் என்ற பிம்பம் உருவாக்கப்படுவதும் மறுபுறத்தில் அச்சத்தையும் பதற்றத்தையும் திட்டமிட்டு உருவாக்குவதும் வழக்கமானதொரு விஷயமாக மாறியிருக்கிறது. அரசியல் என்பது இப்போது இடைவெளியற்ற வகையில் தொலைக்காட்சி நிலையங் களாலும், கருத்துக் கணிப்புகளாலும், பிரம்மாண்டமான பிரச்சாரங்களாலும் பெருநிறுவனங்கள் பல ஆயிரம் கோடிக்கணக்கான ரூபாய்களை செலவழிக்கும் ஒரு விஷயமாக மாறிப் போயிருக்கிறது. இந்தப்பணத்தில் பெரும்பகுதி ரகசியமானது மட்டுமின்றி அடையாளம் காண முடியாத ஒன்றாகவும் இருக்கிறது.*

*அமித் ஷா உள்துறை அமைச்சராக உள்ள நிலையில் குடிமக்கள், குடிமக்கள் அல்லாதவர்கள் குறித்த பதற்றமான சூழ்நிலை அதிகரித்துக் கொண்டே போவது அமெரிக்காவிற்குள் நுழையும் பொருளாதார ரீதியான அகதிகள் குறித்த அமெரிக்க அதிபர் டொனால்ட் ட்ரம்ப்பின் இனவாத, கிட்டத்தட்ட இனவெறித்தனமான கொள்கைகளின் நகலாகவே தென்படுகிறது. இவை அனைத்தையுமே சங் பரிவாரங்கள் மூன்று வேறுபாடுகளுடன் அமெரிக்காவிடமிருந்து கற்றுக்*

*கொண்டவைதான்: வெட்டவெளிச்சமான பதற்றச் சூழ்நிலையை உருவாக்குவது என்பதுதான் இந்தியாவிலுள்ள அனைத்துத் தொலைக்காட்சிகளின் விதிமுறையாக இருந்து வருகிறது; 2019-ம் ஆண்டில் பாஜகவின் செயல்பாட்டை வேகப்படுத்த உதவிய பணத்திற்கான ஆதாரத்தை கண்டுபிடிக்க முடியாது என்பதோடு அமெரிக்காவில் இவ்வாறு தேர்தலில் செலவழிக்கப்படும் தொகையை விட அது மிக அதிகமாகவே உள்ளது; நீதித்துறையினால் தண்டிக்கப்படுவோம் என்ற பயமேதுமின்றி, தீவிரமாகவும், இடைவிடாத வகையிலும் சங் பரிவாரம் தொடர்ந்து கட்டவிழ்த்து விடும் வன்முறை ட்ரம்ப்பின் மூர்க்கத்தனத்தை விடப் பல மடங்கு அதிகமாகும்.*

*“2019 நாடாளுமன்றத் தேர்தல் முடிவுகள் எனக்கு ஆச்சரியத்தை ஏற்படுத்தினவா?” என்று கேட்டால், ஆம், 2014-ம் ஆண்டு தேர்தல் முடிவுகளைப் போலவே இந்தத் தேர்தலும் எனக்கு வியப்பை அளித்தது. அன்றாட தேர்தல் அரசியலில் நான் அதிக கவனம் செலுத்துபவன் அல்ல. எந்தவொரு தேர்தலிலும் எனது தனிப்பட்ட எதிர்பார்ப்புகள் என்பது இடதுசாரிகள், தாராளத்தன்மை கொண்ட இடதுசாரிகள் போன்ற எனக்கு வேண்டியவர்களிடமிருந்து பெற்ற அந்த மதிப்பீடுகள் என்னவென்று தெரியுமா? இருதரப்பினருமே மிகக் குறைந்த வித்தியாசத்தில்தான் வெற்றி பெறுவார்கள்; ஒரு வேளை தொங்கு பாராளுமன்றமாகவும் கூட அது இருக்கலாம். உடனடி எதிர்பார்ப்புகளில் இருந்து நான் விடுபட்ட உடனேயே கட்டமைப்பு குறித்த எனது ஆய்வின் அடிப்படை ஆதாரத்தை நோக்கி நான் திரும்பிச் சென்றேன். மதச்சார்பின்மை எப்போதுமே சிறுபான்மை நிலைபாடு கொண்டதுதான் மதச்சார்பின்மைக்கான உண்மையான பற்றுறுதி என்பது இந்திய சமூகத்திலும் அரசியலிலும் எப்போதுமே சிறுபான்மை நிலைபாட்டைக் கொண்டிருப்பதுதான் என்பதையும் இந்திய சமூகமானது எந்த அளவிற்கு இந்துமயமாக மாறியுள்ளது என்பதையும், எவ்வாறு வகுப்புவாத வன்முறையானது எப்போதுமே பாஜக மற்றும் அதன் கூட்டாளிகளுக்கு தேர்தலில் பெருமளவிற்குப் பலனளிக்க வழிவகுக்கிறது என்பதையும், இந்திய அரசின் முக்கியமான, தேர்தல் ஆணையம், உயர்மட்ட நீதித் துறை ஆகியவை உள்ளிட்ட, நிறுவனங்கள் அனைத்தும் மிக அதிகமான அளவிற்கு பாஜகவின் நலன்களுக்கு சேவை செய்வதாக மாறியுள்ளன என்பதையும் நான் எப்போதுமே வலியுறுத்தி*

*வந்துள்ளேன். 2014-ம் ஆண்டு நடைபெற்ற தேர்தலுக்குப் பிறகு பெருமளவிலான போக்குகள் குறித்து மேலும் அதிகமான கருத்தோட்டங்களை உள்ளடக்கி 2015-ம் ஆண்டில் நான் எழுதிய கட்டுரையை சோஷலிஸ்ட் ரிஜிஸ்டர் இதழ் 2016-ம் ஆண்டில் வெளியிட்டது. அந்தக் கட்டுரை பிரிட்டன், இந்தியா உள்ளிட்ட பல நாடுகளில் மறுபிரசுரம் செய்யப்பட்டது. இப்போது ஜூன் 7, 2019 தேதியிட்ட ஃப்ரண்ட்லைன் இதழிலும் "இந்தியா: தாராளவாத ஜனநாயகமும் அதிதீவிர வலதுசாரிப் போக்கும்" என்ற தலைப்பில் வெளியாகியுள்ளது. இந்திய அரசியலின் முக்கியமான அம்சங்கள் என்று நான் சுட்டிக் காட்டியிருந்தவை மேலும் தீவிரமாகியுள்ளன என்பதையே இப்போது நடக்கும் நிகழ்வுகள் நிரூபிக்கின்றன.*

*தேர்தலில் ஒருபுறத்தில் காங்கிரஸிற்கு ஏற்பட்ட பின்னடைவும், மறுபுறத்தில் இடதுசாரிகளுக்கு ஏற்பட்ட சரிவும் மக்களவையில் பாஜகவிற்கு கிடைத்த பெரும்பான்மையைப் போன்றே முக்கியமானது என்று அந்த நேரத்தில் நான் குறிப்பிட்டிருந்தேன். தேர்தல்கள் நடப்பதற்கு நீண்ட நாட்களுக்கு முன்பாகவே முதலாளித்துவ பெரும்புள்ளிகளின் முழுமையான ஆதரவை பெற்றிருந்த முதல் இந்தியப் பிரதமராகவும் மோடி இருந்தார் என்பதையும் நான் சுட்டிக் காட்டியிருந்தேன். அமெரிக்காவை முன்மாதிரியாகக் கொண்டு இந்திய அரசியலை அதிபர் வகைப்பட்டதாக அவர் கட்டாயமாக மாற்றவில்லை என்ற போதிலும் முன்னாள் அமெரிக்க அதிபர் பராக் ஒபாமா தனது அதிபர் தேர்தலுக்காக செலவிட்ட தொகைக்கு இணையான தொகையை மோடி செலவழித்தார் என்பதும் முக்கியமானது.*

*அரசியலை ஆழமாக உற்று நோக்குபவர்கள் கூட இதில் கவனிக்காமல் விட்ட ஒரு விஷயம் என்னவெனில் இந்தத் தேர்தலுக்காக அவர் திரட்டிய பணமும், பெரு நிறுவனங்களிடமிருந்து எதிர்காலத்தில் திரட்ட அவர் திட்டமிட்டிருந்த தொகையும் கணிசமான அளவிற்கு ஆர்எஸ்எஸ், விஸ்வ இந்து பரிஷத், ஏன் பாஜகவிடமிருந்தும் கூட சுய உரிமை பெற்றவராக அவரை மாற்றியிருந்தது என்பதே ஆகும். ஏனெனில் பாஜகவின் தேர்தல் பிரச்சாரங்களுக்காக ஆர் எஸ் எஸ் அமைப்பு வழங்கிவரும் தொண்டர்களின் விசுவாசத்தை விலைக்கு வாங்கப் போதுமான பணம் அவரிடம் இப்போது இருக்கிறது. அப்படி இருக்கையில் பாஜகவின் இடைநிலை செயல்பாட்டாளர்களையும் கூட அவரால் எளிதாக விலைக்கு வாங்கிவிட முடியும்.*

*தங்களுக்கே ஆன தனி ஒரு உலகத்தை உருவாக்கிக் கொண்டுள்ள மோடி-ஷா இரட்டையரின் தோற்கடிக்க இயலாத தன்மைக்கு அவர்களிடம் இப்போது இருக்கும் அபரிமிதமான செல்வமும் கூட ஒரு விதத்தில் காரணமாகும்.*

*தாராளவாத நிறுவன கட்டமைப்புகளின் இருப்பை ஆர் எஸ் எஸ் அங்கீகரித்த போதிலும் அரசின் நிறுவனங்களை உள்ளிருந்தே கைப்பற்றி நீண்ட கால அரசை அமைக்கப் போராடுவது என்ற நடைமுறை உத்தியை மேற்கொண்டுள்ளது என்று மிகவும் விரிவாகவே நான் வாதிட்டு வந்திருக்கிறேன். 1960களில் இடதுசாரிகளின் புகழ்பெற்ற கோஷத்தை நினைவுபடுத்தும் வகையில் "நிறுவனங்களின் ஊடாக நீண்ட பயணம்" என்றும் கூட நான் அதைக் குறிப்பிட்டிருக்கிறேன். விரிவான அளவில் பார்க்கும்போது அதீத வலதுசாரிகளின் திட்டங்களுக்கும் தாராளவாத நிறுவன கட்டமைப்புகளுக்கும் இடையே அடிப்படையான முரண்பாடுகள் எதுவும் இல்லை. இந்த நிறுவனங்களை ஆர் எஸ் எஸ் கையிலெடுத்து அவற்றின் மூலம் ஆட்சி செலுத்த முடியும் என்றும் கூட நான் வாதிட்டிருக்கிறேன். எனது முந்தைய ஆய்வில் உள்ள இத்தகைய கருத்தாக்கங்கள் பலவற்றையும் கையிலெடுத்துக் கொண்டு இப்போதிருக்கும் நிலையைப் பற்றிய ஆய்வை நாம் முன்னெடுத்துச் செல்ல முடியும் என்றே நான் கருதுகிறேன். உதாரணமாக, பல்வேறு வகைகளிலும் மேற்கொள்ளப்பட்டு வரும் தேர்தல் மோசடிகளின் அளவு குறித்தோ அல்லது இந்திய அரசின் ஒவ்வொரு முக்கிய நிறுவனமும் எந்தவகையிலும் ரகசியம் வெளியே கசிந்துவிடாதபடிக்கு பாதுகாக்க பாஜக/ஆர் எஸ் எஸ் உடன் கூட்டாகச் செயல்படுவது குறித்தோ நான் வியப்படையவே இல்லை. ஏனெனில் அரசானது பெருமளவிற்கு உள்ளிருந்தே கைப்பற்றப்பட்டுவிட்டது என்பதுதான் உண்மை.*

### கசப்பான யதார்த்தங்கள்

*இதுபற்றி மேலும் ஆழமான ஆய்விற்கு நாம் காத்திருக்கத்தான் வேண்டும். என்றாலும் ஒரு சில கசப்பான விஷயங்களை சொல்லியாக வேண்டும். முதலாவதாக, பாரதீய ஜனதா கட்சி உண்மையிலேயே ஒரு தேசிய கட்சியாக இப்போது உருவெடுத்திருக்கிறது. இந்த கட்டமைப்பின் நிலையான மையமாக மோடி-ஷா கூட்டணி இருக்கிறது.*

*இரண்டாவதாக, தனது சொந்த பிரிவின் நலன்களை, பெருநிறுவனங்களின்*

நலன்களை எல்லாம் மீறி மதச் சார்பின்மைக்காக கூட்டாகப் போராட வேண்டிய தேவை இருக்கும் நேரத்தில் இடதுசாரிகளைத் தவிர, வேறெந்த அரசியல் கட்சியுமே, காங்கிரஸ் உள்ளிட்டு, அதற்குத் தயாராக இல்லை. இத்தகைய அங்கீகரிப்பின் விளைவு என்னவெனில் இடதுசாரிகள் நம்பிக்கையோடு இணைந்து செயல்படுவதற்குரிய "மதசார்பற்ற கட்சிகள்' என்ற எதுவுமே இல்லை என்பதுதான். அவர்கள் ஒவ்வொருவருக்குமே மதச்சார்பின்மை என்பது வசதிக்கேற்ற ஒரு விஷயம் மட்டுமே. இந்த விஷயத்தில் இடதுசாரிகள் மிகவும் முழுமையான வகையில் தனிமைப்பட்டுள்ளனர்.

மூன்றாவதாக, காங்கிரஸின் சரிவு என்பது உறுதியானது; அது மீண்டும் உயிர்பெற்று வர வேண்டுமெனில் மிகப்பெரும் மாற்றங்களை அது செய்ய வேண்டும். ஆனால் அதற்கான அறிகுறிகள் எதுவுமே கண்ணில் தென்படவில்லை.

நான்காவதாக, உத்திரப் பிரதேச மாநிலத்தில் சாதிய அரசியலின் இரண்டு மிகப்பெரும் அடையாளங்களாக இருக்கும் சமாஜ்வாதி, பகுஜன் சமாஜ் கட்சிகளின் கூட்டு வலிமையை உடைத்தெறியும் அளவிற்கு மதரீதியான வெறிக்கூச்சல் மற்றும் சமூக நெறியாள்மை ஆகிய கூட்டணியின் அரசியல் வலுவாக உள்ளது என்பதையே உத்திரப் பிரதேச மாநில நாடாளுமன்றத் தேர்தல் முடிவுகள் நிரூபித்துள்ளன. தொடர்ச்சியான சலுகைகளின் மூலம் சாதிய முரண்பாடுகளை பெருமளவிலான இந்து அமைப்பிற்குள்ளேயே கட்டுப்படுத்தி வைத்து விட வேண்டும் என்பதே காந்தியில் இருந்து ஆர் எஸ் எஸ் வரையிலானவர்களின் கனவாக இருந்து வந்துள்ளது. ஒரு வகையில் சொல்வதென்றால் மேல் மட்ட, அடிமட்ட சாதிகள் சகவாழ்வு வாழ்வதற்கு ஒரு நடு சாதிக்கான தீர்வுதான் அது. இந்த விஷயத்தில் குஜராத் மாநிலத்தில் இருந்து நாட்டின் வடகிழக்குப்பகுதி வரையில் ஆர் எஸ் எஸ் பெற்றிருக்கும் பல வெற்றிகளில் மிக சமீப காலத்திய வெற்றியாகவே உத்திரப் பிரதேச தேர்தல் முடிவுகள் அமைகின்றன. சாதிப் பிரச்சனை ஏதாவதொரு வகையில் இந்துத்துவா திட்டத்தை வீழ்த்தி விடும் என்ற நமது ஆழ்ந்த நம்பிக்கையை நாம் மீண்டும் ஆழமாக மறுபரிசீலனை செய்யவேண்டியது அவசியம்.

இறுதியாக, விடுதலை, சீரமைப்பு ஆகியவற்றுக்கான அரசியலுக்கான எந்தவொரு வாய்ப்புக்கும் தொலைதூர நோக்கிலிருந்து பார்க்கும்போது மேற்கு

*வங்கத்தில் இடதுசாரி நோக்கங்கொண்ட வெகுஜன வாக்குகளின் சரிவு, அவற்றில் பெரும்பங்கு பாஜக நோக்கித் திரும்பியிருக்கக் கூடும் என்ற கருத்தில் உள்ள உண்மை ஆகியவை 2019-ம் ஆண்டின் மிகவும் கவலை தரத்தக்க நிகழ்வாகவே அமைகிறது. தாராளவாத அரசியலின் கொடுமைகளும் ஏமாற்றுக்களும் இந்த உலகின் பாவப்பட்ட மக்களை எந்த அளவிற்கு திசை திருப்ப முடியும் என்பதற்கு இது முதல் முறை உதாரணமும் அல்ல; அவ்வாறு நடைபெற்ற முதல் இடமாகவும் மேற்கு வங்க மாநிலம் இருக்கவில்லை திர்ணாமூல் காங்கிரஸ் மற்றும் பாஜக போன்ற இழிசெயல்புரியும் அரசியல் சக்திகளின் மோதல்களுக்கு நடுவே சிக்கும்போது அன்றாட பொருளாயத அவலங்களை எதிர்கொள்ளவே தட்டுத் தடுமாறிக் கொண்டிருக்கும் நிராதரவான, நம்பிக்கை இழந்து போன, துயரத்தில் மூழ்கிப் போன மக்கள் என்னதான் செய்வார்கள்? தாராளவாத அரசியலின் சிதிலங்களில் மிகவும் தனிமைப்பட்டிருக்கும் இடதுசாரிகள் தங்கள் இருப்பைத் தக்க வைத்துக் கொள்வதற்கே போராட வேண்டியிருக்கும் என்று தேர்தலுக்கு முன்பாகவே நான் கூறியிருந்தேன். இப்போது தேர்தல் முடிவுகள் வந்தபிறகு, நிலைமை அதை விட மிகுந்த கவலைக்குரியதாகவே மாறியுள்ளது.*

### *இடதுசாரிகளின் பங்கு*

*இவ்வாறு குறிப்பிட்ட நிலையில், இந்தியாவில் உள்ள இடதுசாரிகள் குறித்து மூன்று விஷயங்களை நான் வலியுறுத்த விரும்புகிறேன். ஒன்று வேறு எந்தவொரு கட்சியுடனும் ஒப்பிடமுடியாத வகையில் பரந்த அரசியல் அனுபவமும் ஆழ்ந்த ஸ்தாபனமும் அவர்களிடம் இருக்கிறது. இடதுசாரிகளின் பின்னடைவால் ஏற்பட்டுள்ள வெற்றிடத்தை சமூக ரீதியான இயக்கங்களும், அரசுமுறை சாரா அமைப்புகளும், அங்குமிங்குமாக செயல்பட்டு வரும் சிறு குழுக்களும் நிரப்பி விடக் கூடும் என்று யாரும் நினைத்தால் அத்தகைய ஒரு நிகழ்வு நடக்கவே நடக்காது. இரண்டாவதாக, ஏழைகளின், ஒட்டுமொத்த உழைக்கும் வர்க்கத்தின் பார்வையில் இருந்து தெளிவான நோக்கும், சமூகம் குறித்த முழுமையான புரிதலும் உள்ள ஒரே சக்தியாக இடதுசாரிகள் மட்டுமே உள்ளனர். அறிவுலகத்திலும் கலாபூர்வமான வாழ்க்கையிலும் இந்தியாவில் உள்ள இடதுசாரிகளின் இருப்பு மிகவும் அபரிமிதமான ஒன்றாகும். வேறு எந்தவொரு அரசியல் சக்தியும் இந்த விஷயத்தில் அதன் அருகில் கூட வரமுடியாது. மறுகட்டமைப்பைத்*

தொடங்குவதற்குத் தேவையான பேராற்றல் மிக்க துணிவு இப்போது அதற்குத் தேவைப்பட்ட போதிலும், தேவையான அடிப்படையான வள ஆதாரங்கள் இன்னமும் அதனிடம் இருக்கவே செய்கின்றன.

கடந்த ஐந்து ஆண்டுகளில்நடைபெற்ற அனைத்திற்கு பிறகு *2019*தேர்தலின் முடிவுகள் பற்றி வியப்படைவதற்கு அடிப்படையில் எதுவுமில்லை; அடுத்த ஐந்து ஆண்டுகள் இதை விட மோசமாக இருப்பதற்கான வாய்ப்புகள் குறித்தும் கூட நாம் வியப்படைய வேண்டிய அவசியமில்லை. நமது நாட்டின் விடுதலைக்கான போராட்டத்தைத் தொடங்கி வைத்த யுகம் இப்போது முடிவடைந்து கொண்டிருப்பதாகவே தோன்றுகிறது. இருந்தாலும், மிக விரிவான வகையில் சேதமாகிவிட்ட ஒரு நாட்டையே நமது இளைஞர்கள் இப்போது பெறவிருக்கிறார்கள். அதை மீண்டும் புனரமைப்பதைத் தவிர வேறெந்த வழியும் அவர்களுக்கு இல்லை; அதையும் கூட அவர்கள் கீழே இருந்துதான் தொடங்க வேண்டியிருக்கிறது.

நன்றி: ஃப்ரண்ட்லைன்

அடுத்த இதழில்: இந்துத்வாவின் தாக்குதல்கள்

# 4. கல்வியும் கம்யூனிஸ்டுகளும்

ஜி. செல்வா

*கஸ்தூரிரங்கன் குழு பரிந்துரைத்துள்ள 'தேசியக் கல்விக் கொள்கை வரைவு 2019' இந்திய மக்களிடையே பெரும் விவாதப் பொருளாக மாறியுள்ளது. மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி இந்த வரைவு அறிக்கை குறித்து மிக விரிவாக விவாதித்து, விமர்சனபூர்வமாக நீண்ட குறிப்பொன்றை மத்திய மனிதவள மேம்பாட்டு துறை அமைச்சருக்கு அனுப்பியுள்ளது. இந்த வரைவு அறிக்கையை முழுமையாக நிராகரிக்க வேண்டுமென சுட்டிக்காட்டியுள்ளது. இந்தக் கருத்துக்கு ஆதரவாக இந்திய மக்களை அணி திரட்டும் முயற்சியில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி ஈடுபட்டு வருகிறது.*

*இந்தச் சூழலில் தேசிய கல்விக் கொள்கை வரைவுக்கு ஆதரவாகப் பேசியும் எழுதியும் வரும் சிலர் 'எதிர்க்கட்சிகள் என்றாலே ஆளுங்கட்சியின் கொள்கையை எதிர்ப்பதுதானே நடைமுறை' என குறுகிய பார்வையோடும், இன்னும் ஒரு படி மேலே சென்று "கம்யூனிஸ்டுகளுக்கு கல்வி குறித்து என்ன பார்வை உள்ளது?" எனவும் கேள்வி எழுப்புகின்றனர். இந்தக் கேள்விகளுக்கு முகம் கொடுத்து விவாதிப்பதன் மூலம் கல்வி குறித்த கம்யூனிஸ்டுகளின் பார்வையை இக்கட்டுரை எடுத்துரைக்க முயல்கிறது.*

### தீர்க்கமான பார்வை

*"கல்வியின் மீது சமூகம் ஏற்படுத்தும் தாக்கத்தை கம்யூனிஸ்டுகள் புதிதாகக் கண்டுபிடிக்கவில்லை. அதனுடைய தன்மையை மட்டுமே மாற்றுகிறார்கள்" என 1848-லேயே கம்யூனிஸ்டுகளின் அடிப்படைப் பார்வையை மார்க்ஸூம் எங்கெல்ஸூம் கம்யூனிஸ்ட் அறிக்கையில் பிரகடனம் செய்துவிட்டனர். "குழந்தைகளை வணிகப் பொருள்களாக, உழைப்புக் கருவிகளாக மாற்றிவிட்டு, பெற்றோர்களுக்கும் குழந்தைகளுக்கும் இடையே நெருக்கமான உறவு குறித்து பேசும் பேச்சுக்கள் எல்லாம் அருவருக்கத்தக்கதாக மாறிவிட்டதாக" கம்யூனிஸ்டு அறிக்கை குறிப்பிபிட்டது இன்றைக்கும் பொருத்தமானதே!*

''பொருளாதார சமூகப் பிரச்சினைகளுக்கு தீர்வுகாண, முழுமையாக வளர்ச்சி பெற்ற மனிதர்களை வளர்த்தெடுக்க, கல்வியும் உற்பத்தி உழைப்பும் திட்டமிட்டு இணைக்கப்பட்ட பல்தொழில்நுட்ப கல்வியை அடிப்படையாகக் கொண்டு கல்வி அமைப்பு உருவாக்க வேண்டுமென'' கூறியதுடன், சோஷலிச சோவியத் யூனியனில் அதை வளர்த்தெடுத்தும் காண்பித்தார் மாமேதை லெனின்.

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் கீழ் இந்தியா பெற்றிருந்த கல்வி அறிவைவிட மிகவும் பின்தங்கி இருந்த சீனா, தோழர் மாவோ தலைமையில் புரட்சிக்குப் பின் கல்வித்துறையில் ஏற்படுத்திய மாற்றங்கள் குறிப்பிடத்தக்கவை. இன்று உலகத்தின் தலைசிறந்த பல்கலைக்கழகங்களை அதிகமாகக் கொண்ட நாடுகளின் வரிசையில் சீனா இரண்டாவது இடத்தில் உள்ளது. உற்பத்தி, தகவல் தொழில்நுட்பம், வேளாண்மை, வணிக மேலாண்மை என அனைத்துத் துறைகளிலும் சீனா இன்று ஆதிக்கம் செலுத்துவதற்கு, அது கல்வித் துறையில் ஏற்படுத்திய மாற்றங்கள் முக்கியக் காரணமாகும்.

சுருங்க சொன்னால், கம்யூனிஸ்டுகளுக்கு கல்வி குறித்து தீர்க்கமான பார்வை உண்டு. முதலாளித்துவ சமூகம் கட்டமைக்கும் சமூக கட்டமைப்புக்கு மாறாக, சமமான – தரமான கல்வியை அனைவருக்கும் அளிப்பதை முக்கிய நோக்கமாகக் கொண்டு கம்யூனிஸ்டுகள் செயலாற்றி வருகின்றனர். அவ்வாறே, தற்போதுள்ள முதலாளித்துவ சமூகங்களில் வழங்கப்படும் கல்விமுறை குறித்து கூர்மையான விமர்சன விழிப்புணர்வோடு, உழைக்கும் மக்களை வளர்த்தெடுப்பதிலும் கம்யூனிஸ்ட் கட்சிகள் கவனம் செலுத்தி வருகின்றன.

### விடுதலைக்கு முன் இந்திய கல்வி

ஐரோப்பியர்கள் இந்தியாவை வெற்றிகொள்வதற்கு முந்தைய இந்திய சமூகநிலை குறித்து தோழர் இ.எம்.எஸ். கீழ்க்கண்டவாறு வரையறுக்கிறார்: ''வருண சாதி அமைப்புமுறை உருவானவுடன் அதைப் பராமரிக்கவும், நியாயப்படுத்தவும் உதவும் வகையில் சுரண்டல் அமைப்பு முறையை சுற்றி ஒரு தனியான சமய – சித்தாந்த தத்துவார்த்த கட்டமைப்பு உருவாக்கப்பட்டது. அடிமைச் சுரண்டல் முறைக்கு பொருத்தமான சமய தத்துவார்த்த கட்டமைப்பிலிருந்து வேறுபட்ட ஒரு கட்டமைப்பு இந்தியாவில் அமைக்கப்பட்டது. இதுதான் இந்து மதம், இந்து

*தத்துவம், இந்து கலாச்சாரம் என்ற வடிவத்தில் தோன்றியது. இதையே இந்து வகுப்புவாதிகள் புனிதமான இந்திய கலாச்சாரம் என அழைக்கின்றனர்'' என்றார்.*

*இந்தப் பண்பாட்டில், உழைக்கும் மக்களுக்கு, அதாவது சூத்திரர்களுக்கும் பஞ்சமர்களுக்கும், கல்வி முழுமையாக மறுக்கப்பட்டது. ''சூத்திரர்களுக்கு கடவுள் விடுத்துள்ள ஒரே வேலை பிராமணர், சத்திரியர், வைசியர் ஆகிய மூன்று பிரிவினருக்கும் பணிவோடு ஊழியம் செய்வதே'' என்கிறது மனுஸ்மிருதி. பிறப்பின் அடிப்படையில் நால்வர்ணங்களாக பிரித்த அமைப்பில் சூத்திரர் நிலை கிட்டத்தட்ட அடிமை நிலையாக இருந்தது என்றால், இந்த நால்வர்ணத்துக்கு அப்பாற்பட்ட தலித் மக்களின் நிலையோ முற்றிலும் அடிமைநிலைதான்!*

*இந்த இழிநிலைக்கு எதிராக சமூக சீர்திருத்தப் போராளிகள் தொடுத்த இடைவிடாத சித்தாந்தக் அறப்போராட்டங்கள் வாயிலாகவே, ஒடுக்கப்பட்ட பிரிவினர் கல்வி வாசனையை நுகர முடிந்தது. இவர்களின் குரல்களுக்கு செவிமடுப்பதுபோல் நடித்துக் கொண்டே வெள்ளை ஏகாதிபத்தியம் வேரில் வெந்நீரை ஊற்றும் வேலையை செய்தது. கல்வித் துறையில் சதி ஆட்டம் ஆட ஆரம்பித்தது. இந்தியாவில் தாய்மொழிக் கல்விக்கு மாற்றாக ஆங்கில வழிக்கல்வியை திணித்தது '1813 சாசனம்'; எண்ணத்திலும் அறிவாற்றலிலும் ஆங்கிலேய அடிமைகளை உருவாக்க முயன்றது 'மெக்காலே கல்விக் கொள்கை'; இதற்கு ஏற்றாற்போன்று போதனா முறையை உருவாக்கியது '1854 சார்லஸ் உட் நடவடிக்கை'; தேர்வுகளை கண்டுபிடித்தது '1882 ஹன்டர் கமிஷன்'. இத்தகைய குழுக்களின் பரிந்துரையுடன் நவீன இந்தியக் கல்வி முறை கட்டமைக்கப்பட்டது.*

*இதற்கு மாற்றாக கல்வியின் உள்ளடக்கம் – பயிற்றுமொழியைக் குறித்தெல்லாம் விடுதலைப் போரில் பங்கெடுத்த தேசியத் தலைவர்கள், காங்கிரஸ் காரர்கள், கம்யூனிஸ்டுகள் கூர்மையான கருத்துக்களை, விமர்சனங்களை முன்வைத்து வந்தனர். ஒரு சில இடங்களில் அதை பரிசோதனையாகவே செய்து காட்டவும் முயன்றனர். ஜோதிராவ் பூலே, சாவித்திரி பாய் பூலே தொடங்கி தாகூர், காந்தி, பெரியார், அம்பேத்கர், சிங்காரவேலர் உள்ளிட்ட பலர் கல்வித் தளத்தில் ஆற்றிய பங்கு குறிப்பிடத்தக்கது.*

*வெள்ளை ஏகாதிபத்தியத்துக்கு எதிராக வெகுண்டெழுந்த மக்களின்*

*உணர்வுகளையும் தேசத் தலைவர்களின் கனவுகளையும் பிரதிபலிக்கும் வகையில் இந்திய அரசியலமைப்புச் சட்டம் 1950-ல் இயற்றப்பட்டது. "அரசியலமைப்புச் சட்டம் நடைமுறைக்கு வந்த பத்தாண்டுகளுக்குள் அனைத்து குழந்தைகளுக்கும் அவர்களது 14 ஆவது வயது முடியும்வரை இலவச கட்டாயக் கல்வி தர அனைத்து முயற்சிகளையும் அரசு எடுக்க வேண்டும்" என அரசியலமைப்புச் சட்டம் வலியுறுத்தியது. ஆனால் அதை நிறைவேற்ற ஒரு சட்டம் வருவதற்கே, விடுதலை அடைந்த இந்தியாவில் சுமார் 60 ஆண்டு காலம் போராட வேண்டிய நிலை ஏற்பட்டது.*

### விடுதலை இந்தியாவில் கல்வி

*"விடுதலைக்கு பிந்தைய ஆரம்ப ஆண்டுகளில் மேற்கத்திய நாடுகளிடம் இருந்து நியாயமான உதவி பெற இயலாததால், இந்திய பெருமுதலாளி வர்க்கம் சோவியத் யூனியனிடம் உதவி கோரியது. முதலாளித்துவத்தை வளர்க்க, அரசு வழிநடத்தும் முதலாளித்துவப் பாதையை முதலாளிகள் தேர்ந்து கொண்டனர். ஏகாதிபத்தியம், சோஷலிசம் என்ற இரண்டு முகாம்களையும் பேரம் பேசுவதற்கு பயன்படுத்திக் கொண்டு தங்கள் நிலையை உருவாக்கிக் கொண்டனர். திட்டமிட்ட பொருளாதாரம் முதலாளித்துவப் பாதையில் ஒரு பகுதியாக பயன்படுத்தப்பட்டது" (சிபிஐ-எம் கட்சி திட்டம்) இதற்கு உகந்த பாதையில் திட்டமிட கல்வித்துறையில் பல்கலைக்கழகக் கல்வி குறித்து டாக்டர் ராதாகிருஷ்ணன் (1948-49), உயர் கல்வி – தொழில்நுட்பக் கல்வி குறித்து லட்சுமணசாமி (1952-53) ஆகியோர் தலைமையில் இரண்டு குழுக்களை நேரு அரசு அமைத்தது. தொடர்ந்து, கல்வியில் நவீனமயமாக்கலை முன்மொழிவதற்கு 1964இல் அப்போதைய பல்கலைக்கழக மானியக் குழுவின் தலைவர் டாக்டர் டி.எஸ். கோத்தாரி தலைமையில் குழு அமைக்கப்பட்டது. இந்தக் குழு இரண்டு ஆண்டுகள், 12 உண்மை அறியும் குழுக்கள், ஏழு செயல் அமைப்புக் குழுக்கள் என இயங்கி 9,000 பேரிடம் கருத்துகளைக் கேட்டறிந்து, 2,400 பக்க அறிக்கையை 1966 ஜூன் 29 அன்று சமர்ப்பித்தது. இதுவே 'கோத்தாரிக் கல்விக் குழு' என அழைக்கப்படுகிறது. இந்தக் குழுவின் பரிந்துரையின் பேரிலேயே 1968 'தேசிய கல்வி கொள்கை' உருவாக்கப்பட்டது. ஆட்சியில் இருக்கும் அதிகார வர்க்கத்தினர் கோத்தாரிக் கல்விக் குழுவின் பரிந்துரைகளில் சமச்சீர்கல்வி, அருகாமைப் பள்ளிகள், கல்விக்கு ஜி.டி.பி.யில் 6 சதவீதத்தை ஒதுக்கீடு செய்தல்*

*போன்ற பரிந்துரைகளுக்கு மாற்றாக, தங்களுக்கு உகந்த மும்மொழிக் கொள்கை, தனித்தொகுதி மையங்கள், பல்கலைக்கழக நிர்வாக முறைகளில் தேவைப்படும் மாற்றங்கள் உள்ளிட்ட ஆலோசனைகளை மட்டுமே ஏற்று செயல்பட ஆரம்பித்தது.*

*சுதந்திர இந்தியாவின் தொடக்க ஆண்டுகளில் முதலாளித்துவ வளர்ச்சிக்கு உகந்த கட்டமைப்பு வசதிகளை உருவாக்குவதற்கு ஏற்ற மூலதனம் இல்லாததால், அரசுத் தலையீட்டை இந்தியப் பெருமுதலாளிகள் விரும்பினர். எனவே கல்வி, விவசாயம், தொழில் உள்ளிட்ட அடிப்படைக் கட்டமைப்புகளில் அரசின் மூலதனம் செலவிடப்பட்டது. 1980-களின் மத்தியில் இதில் மாற்றம் ஏற்படத் தொடங்கியது. இந்தியப் பெருமுதலாளி வர்க்கம் அரசுக்கு என ஒதுக்கப்பட்ட தொழில்களில், பொதுத்துறை நிறுவனங்களை தாங்களே எடுத்துக்கொண்டு அந்நிய மூலதனத்தோடு சேர்ந்து புதிய பகுதியில் விரிவடைய தயாராகியிருந்தது. இதற்கு ஏற்றாற்போல் பொருளாதாரக் கொள்கையை, கல்விக் கொள்கையை வடித்தெடுக்கும் திட்டம் ராஜீவ் காந்தி ஆட்சி காலத்தில் தொடங்கியது.*

*கல்வியை வழங்குவது அரசின் கடமை என்பது காலாவதியாகிப் போன முழக்கமாக மாற்றப்பட்டது. இரு வேறு கல்வி முறை கூர்மையாக பிரித்தெடுக்கப்பட்டு உருவாக்கப்பட்டது. உற்பத்தித் துறைக்கு மாறாக, வணிக, சேவைத் துறைக்கு உகந்ததாக கல்வி அமைப்பு செயல்படத் தொடங்கியது. இத்தகைய தாராளமய, தனியார்மய பாதை பெருமுதலாளிகளுக்கு ஏராளமான பலன்களை தந்தது. புதிய வர்த்தக நிறுவனங்கள் தோன்றி பெருமுதலாளித்துவ நிறுவனங்களாக விரிவடைந்தன. 1957-ம் ஆண்டில் 22 ஏகபோக நிறுவனங்களின் சொத்து மதிப்பு ரூ. 312.63 கோடியில் இருந்து, 1997-ல் ரூ. 1,58,00,472 கோடியாக, அதாவது 500 மடங்கு, உயர்ந்திருந்தது.*

*“மக்களுக்கு கல்வி கொடுக்கும் கடமையில் இருந்து அரசு விலகிக் கொள்ள வேண்டும்”, “இனி கல்வி என்பது உலக சந்தையின் ஒரு பண்டமாக கருதப்படும்” என 1990-ல் உலக வங்கியும் ஐ.நா.வும் இணைந்து நடத்திய ‘எல்லோருக்கும் கல்விக்கான உலக மாநாட்டில்’ வெளியிடப்பட்ட ‘ஜோமிதியன் பிரகடனம்’ கூறியது. இதைத் தொடர்ந்து 1995-ல் உலக வர்த்தக அமைப்பானது ‘கல்வி, மருத்துவம் உட்பட அனைத்து சேவைகளும் வாங்க, விற்க, பொருளை ஈட்டக்கூடிய பொருட்களாக’*

மாற்றியது. இதற்கேற்ற வகையில் ‘காட் ஒப்பந்தங்கள்’ உருவாக்கப்பட்டன. இதற்குப் பிறகு இந்தியப் பொருளாதாரம் முழுமையாக அந்நிய மூலதனத்துக்குத் திறந்து விடப்பட்டது. இது கல்விக் கொள்கையிலும் பிரதிபலிக்கத் தொடங்கியது. தனியார் பல்கலைக்கழகங்கள், நிகர்நிலைப் பல்கலைக்கழகங்கள், வெளிநாட்டுப் பல்கலைக்கழகங்கள், பன்னாட்டு உறைவிடப் பள்ளிகள் போன்றவைவை புற்றீசல்போல் உருவெடுக்கத் தொடங்கின.

### வாஜ்பேயி ஆட்சி காலத்தில் கல்வி

கல்வியாளர்களை கொண்டே கல்வி குறித்து ஆய்வு அறிக்கைகள் பெற்றுக்கொண்டு வந்த இந்திய அரசு முதல்முறையாக வாஜ்பேயி காலத்தில் இந்தியப் பெருமுதலாளிகள் அம்பானி – பிர்லா தலைமையில் குழு அமைத்து ‘கல்வி சீரமைப்புக்கான ஒரு கொள்கை வரையறை’யை உருவாக்கியது. இக்குழு பெரும் லாபம் தரக்கூடிய சந்தையாக கல்வியைப் பார்த்தது. கல்விக் கட்டணத்தை முழுமையாக மாணவரிடமிருந்து வசூலிக்க வேண்டும், உயர்கல்வியை தனியார்மயமாக்கி, அதில் அந்நிய நேரடி முதலீட்டை அனுமதிக்க வேண்டும் என அம்பானி – பிர்லா அறிக்கை கூறியது. ‘கல்வி என்பது எதிலும் பொருந்திக்கொள்கிற மலிவான, அதே நேரத்தில் புது திறன்களையும் புதுமைகளையும் ஏற்றுக்கொள்கிற தொழிலாளர்களை உருவாக்கித் தருகிற ஒன்றாக இருக்க வேண்டும்’ என ஓங்காரமாய் பேசியது. மேலும், ‘பல்கலைக்கழக – கல்வி நிறுவன வட்டாரங்களில் அரசியல் நடவடிக்கைகளை தடை செய்யும் சட்டம் இயற்றப்பட வேண்டும்’ எனவும் அம்பானி – பிர்லா குழு வற்புறுத்தியது.

அதே வாஜ்பேயி ஆட்சியே பாடப்புத்தகங்களில் திட்டமிட்டு இந்துமத அடிப்படைவாத கருத்துக்களைத் திணித்தது. பல்கலைக்கழகங்களில் வேத ஜோதிடம், வேதக் கணிதம் ஆகியவற்றை பாடதிட்டங்கள் ஆக்கினர். சிறுபான்மை மக்களுக்கு எதிரான அவதூறுக் கருத்துக்கள், மதவெறியைத் தூண்டும் சிந்தனை ஓட்டம் பாடப்புத்தகங்களாக மாற்றப்பட்டன. கல்விப் புலங்களில், ஆய்வு நிறுவனங்களிலிருந்து, இடதுசாரி ஆய்வாளர்கள் நீக்கபட்டு ஆர்.எஸ்.எஸ். சிந்தனையாளர்கள் நியமிக்கப்பட்டனர்.

இடதுசாரிக் கட்சிகளின் ஆதரவோடு 2004ல் ஆட்சி பொறுப்புக்கு வந்த

காங்கிரஸ் தலைமையிலான ஐக்கிய முற்போக்கு கூட்டணி அரசு பல்வேறு குறைபாடுகளுடன் கல்வி உரிமைச் சட்டத்தை நிறைவேற்றியது. தகவல் தொழில்நுட்பப் புரட்சிக்கு உகந்தாற்போன்று கல்வித்துறையில் மாற்றம் கொண்டுவர சாம் பிட்ரோடா தலைமையில் 'தேசிய அறிவுசார் ஆணைய'த்தை அரசு உருவாக்கியது.

### மோடி அரசின் மோசடி வித்தை

அதிகார வர்க்கத்தின் சுரண்டல் தன்மைக்கு ஏற்றாற் போன்று கல்விக் கொள்கையும் காலம்தோறும் மாற்றப்பட்டு நடைமுறைப்படுத்தப்பட்டு வருவதன் தொடர்ச்சியாகவே இன்றைய ஆர்எஸ்.எஸ். – பா.ஜ.க. தலைமையிலான அரசு வெளியிட்டுள்ள கஸ்தூரிரங்கன் தலைமையிலான 'தேசிய கல்விக் கொள்கை வரைவு 2019' -ஐ காண வேண்டியுள்ளது.

பா.ஜ.க. ஆட்சி 2014-ல் வந்தவுடனேயே அப்போதைய மத்திய மனிதவள மேம்பாட்டுத்துறை அமைச்சர் ஸ்மிருதி இரானி புதிய கல்விக் கொள்கையை உருவாக்க டி.எஸ்.ஆர்.சுப்பிரமணியன் தலைமையில் 5 பேர் கொண்ட குழு அமைத்தார். இதில் ஒருவர் மட்டுமே கல்வியாளர். இக்குழு 2016 மே மாதம் 90 பரிந்துரைகளை அரசுக்கு கொடுத்தது. ஆனால், அவை என்னவானது என யாருக்கும்தெரியாது.

இதைத் தொடர்ந்து 'புதிய தேசிய கல்விக் கொள்கை'யை உருவாக்க விஞ்ஞானி கஸ்தூரிரங்கன் தலைமையில் 2017 ஜூன் 24 அன்று 11 பேர் கொண்ட குழு அமைக்கப்பட்டது. எவ்விதமான வெளிப்படையான காரணங்களையும் அறிவிக்காமல் இந்த குழுவுக்கு ஐந்து முறை காலநீட்டிப்பு அளிக்கப்பட்டு 2018 டிசம்பர் 15 அன்று அன்றைய மனித வள மேம்பாட்டு துறை அமைச்சர் பிரகாஷ் ஜவடேகரிடம் அறிக்கை சமர்ப்பிக்கப்பட்டது. ஆனால், அதே அறிக்கையை பா.ஜ.க. தேர்தலில் வெற்றி பெற்ற பிறகு புதிதாக பொறுப்பேற்ற மனிதவள மேம்பாட்டுத் துறை அமைச்சர் பொக்ரியாலிடம் மே 29 அன்று இரண்டாவது முறையாக கஸ்தூரி ரங்கன் வழங்கியதாக அதிகாரபூர்வமான செய்தி வந்தது.

கஸ்தூரிரங்கன் தலைமையிலான 11 பேர் கொண்ட குழு பற்றி நாடறிந்த

கல்வியாளர்கள் கூர்மையாக பல்வேறு விமர்சனங்களை வைத்து வருகின்றனர். மதுரை காமராஜர் பல்கலைக் கழகத்தை சேர்ந்த முனைவர் சந்திரகுரு, அக்குழுவில் பணியாற்றிய ஒவ்வொருவர் குறித்தும் விரிவாக ஆய்வு செய்துள்ளார். 11 பேர் கொண்ட குழுவின் அறிக்கை, அரசிடம் அறிக்கை கொடுக்கப்படும்போது 9 பேர் கொண்ட குழுவாக மாறிவிட்டது.

இவர்களில் இந்த அறிக்கையை முழுமையாக உருவாக்கி வடித்தெடுத்தவர் பெங்களூரைச் சேர்ந்த எம்.கே.ஸ்ரீதர். இவர் படிக்கும் போதே ஏ.பி.வி.பி. அமைப்பின் தேசிய செயலாளராக இருந்தவர். இந்திய அரசியலமைப்புச் சட்டத்தின் விழுமியங்களை சிதைக்கும் ஆர்.எஸ்.எஸ். இயக்கத்தின் சிந்தனாவாதி.

மனு ஸ்மிருதி தொடங்கி, மெக்காலே கல்விக் கொள்கை, ராஜீவ் காந்தியின் புதிய கல்விக் கொள்கை, அம்பானி பிர்லா குழு, சாம் பிட்ரோடா குழு என இதற்கு முன் அமைக்கப்பட்ட அனைத்து குழுக்களின் ஆலோசனைகளை கலந்து இன்றைய சந்தை பொருளாதாரத்துக்கு உகந்தாற்போன்று ‘ஆர்.எஸ்.எஸ். ஆய்வகத்தில்’ செய்த கலவைதான் டாக்டர் கஸ்தூரி ரங்கன் குழு உருவாக்கிய ‘புதிய கல்விக் கொள்கை’.

இந்திய மரபைப் பற்றித் தெரிந்துகொள்ளவும் புவியியல் பற்றிய அறிவை விரிவுபடுத்தவும், இந்தியர் என்ற பெருமிதம் கொள்ளவும், சுயமதிப்பீடு அதிகரிக்கவும் வழிவகை செய்யும் வகையில் பல்வேறு திட்டங்களை வரைவு அறிக்கை ஆங்காங்கே பேசிச் செல்கிறது. அதாவது புராதன பண்பாட்டுப் பெருமை என்ற பெயரில் பகுத்தறிவுக்கு ஒவ்வாத, பிற்போக்கு, பழமைவாத, சாதிய கருத்துக்களை கல்வியில் திணிப்பதற்கு திட்டமிட்டு பரிந்துரைகளை கொடுத்திருக்கிறார் கஸ்தூரி ரங்கன். விமர்சனப் பார்வையை மழுங்கடிக்கக் கூடிய வகையில் பழைய கல்வி முறையை போற்றிப் புகழ்ந்து குரு-சிஷ்ய உறவு குறித்தெல்லாம் வரைவு தேசிய கல்விக் கொள்கையை உருவாக்கியவர்கள் ஆலாபனை பாடியிருக்கிறார்கள்.

### பேச வேண்டியதை பேசாதது ஏன்?

தற்போதைய இந்தியக் கல்வி கொள்கை குறித்து ஏராளமான விமர்சனங்களை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியும் முற்போக்கு ஜனநாயக சக்திகளும் தொடர்ந்து

முன்வைத்து வருகின்றன. நடைமுறையிலுள்ள கல்வி முறைக்கு மாற்றாக மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தனது திட்டத்தில், "அனைத்து நிலைகளிலும் விரிவான – அறிவியல்பூர்வமான கல்வி கிடைக்க பொதுக் கல்வி நிறுவன முறை வளர்க்கப்படும். மேல்நிலைக் கல்விவரை இலவச – கட்டாயக் கல்வி வழங்கப்படும். கல்வியில் மதச்சார்பற்ற தன்மை உத்தரவாதப்படுத்தப்படும். உயர்கல்வி – தொழிற்கல்வி நவீனப்படுத்தப்பட்டு மேம்படுத்தப்படும். முழு அளவிலான ஆராய்ச்சி – வளர்ச்சி நிறுவனங்கள் மூலம் அறிவியல் – தொழில்நுட்ப வளர்ச்சி ஊக்குவிக்கப்படும். விளையாட்டு நடவடிக்கைகளுக்கு உத்வேகம் அளிக்கும் வகையில் விரிவான விளையாட்டுக் கொள்கை நிறைவேற்றப்படும்" எனக் கூறியுள்ளது.

ஆனால் பா.ஜ.க. அரசு சார்பாக முன்மொழியப்பட்டுள்ள வரைவறிக்கையோ தற்போதைய கல்வித் துறையில் நிலவும் பலவீனங்கள் குறித்து எதுவும் பேசாமல், அல்லது இத்தகைய பிரச்சினைகளுக்கு ஏன் புதிய தீர்வுகளை முன்மொழிகிறோம் என தர்க்க அடிப்படையில் எதுவுமே பேசவில்லை. 'நீ படிக்கக்கூடாது.. உனக்கு படிப்பு ஒரு கேடா.. நீ எல்லாம் மாடு மேய்க்கத்தான் லாயக்கு'. இப்படிக் காலம்காலமாக சொல்லப்பட்டுவந்த வார்த்தைகளை நவீன இந்தியாவில் எப்படி நயமாக சொல்வது என்பதற்கு ஆர்.எஸ்.எஸ். மூளை அதிகார வர்க்கத்துக்கு வழிகாட்டியுள்ளது. எட்டாம் வகுப்பை தாண்டவே மூன்று பொதுத்தேர்வு. அதற்கடுத்து 9 முதல் 12ஆம் வகுப்பு மாணவர்களுக்கு எட்டு மாதத்துக்கு ஒருமுறை 40 தாள்களுக்குத் தேர்வு. இதில் தேர்ச்சி பெற்றாலும் மதிப்பெண் பெற்றாலும் உயர்கல்வி பயிலவோ கல்லூரிக்கோ செல்ல முடியாது. அவ்வாறு செல்வதற்கு 'தேசிய தகுதித் தேர்வு' எழுத வேண்டும். இதில் எடுக்கக்கூடிய மதிப்பெண்களை பொறுத்தே உயர்கல்விக்குச் செல்ல முடியும். இவையெல்லாம் எதிர்கொண்டு கல்லூரிக்குப் போய் பி.ஏ., பி.காம்., பி.எஸ்சி. படித்தாலும் அதற்கு மதிப்பில்லை. அதற்குப் பிறகு நாடுதழுவிய அளவில் நடத்தப்படும் தகுதித் தேர்வில் எடுக்கப்படும் மதிப்பெண்ணை வைத்துதான் எந்த மேற்படிப்பைப் படிப்பது என்று மதிப்பிடப்படும். பொறியியல், மருத்துவம், வேளாண்மை உள்ளிட்ட அனைத்து பாடப்பிரிவுகளுக்கும் இதே நிலைதான்.

டியூஷன் சென்டர், கோச்சிங் சென்டர் அதற்கேற்றாற் போன்று நோட்டுப்

*புத்தகம், ஆடியோ, வீடியோ பயிற்சி வகுப்புகள் நடத்தி, கொள்ளை லாபத்தைச் சுரண்டுவதற்கு இயலாமல் முட்டு சந்தில் மாட்டிக் கொண்டிருக்கும் முதலாளித்துவ வர்க்கத்துக்கு சிக்கெடுத்து, சீரெடுத்து சாமர்த்தியமாக வழிகாட்டி இருக்கிறார்கள் சாவர்க்கர் வீட்டுப் பிள்ளைகள்.*

*இந்திய அரசியலமைப்புச் சட்டத்தில் இந்திய மக்களுக்கு உறுதியளிக்கப்பட்ட இட ஒதுக்கீட்டை இல்லாது ஒழிக்க 'தரம்' என்கிற அஸ்திரத்தை ஏவியுள்ளார் கஸ்தூரி ரங்கன். கல்விரீதியாகவும் சமூகரீதியாகவும் ஒடுக்கப்பட்ட மக்களுக்கு உறுதியளிக்கப்பட்ட உரிமைகள்கூட முழுமையாக நடைமுறைப்படுத்தாததற்கு யார் காரணம் என்கிற கேள்வியை கஸ்தூரி ரங்கன் ஏனோ எழுப்பவில்லை. இன்னும் ஒரு படி மேலே சென்று, தனியார் கல்வி நிலையங்களில் இடஒதுக்கீடு குறித்து வற்புறுத்த இயலாது என வரைவு அறிக்கை பேசுகிறது. அரசுப் புள்ளிவிவரங்களே தலித் பழங்குடியின மக்களுக்கு எதிராகத் தொடுக்கப்படும் வன்முறைகள் அதிகரித்து வருவதை தெள்ளத் தெளிவாக எடுத்துரைக்கின்றன. இடஒதுக்கீடு அடிப்படையில் ஒதுக்கப்பட்ட இடங்களில்கூட முழுமையாகப் பிற்படுத்தப்பட்ட சமூகத்தினர் இல்லாததை புள்ளிவிவரங்கள் சுட்டிக்காட்டுகின்றன. இத்தகைய சூழலில் இடஒதுக்கீட்டுக்கு எதிராக பேசுவது எந்த விதத்தில் நியாயம்?*

### *ஒற்றை அதிகாரத்துக்கான ஒற்றையடிப் பாதை*

*1990-களுக்குப் பிறகு பேசிய பல குழுக்களின் கண்ணோட்டத்துக்கு வடிவம் கொடுக்கக்கூடிய வகையில், இந்த கல்விக் குழுவின் அறிக்கை அனைத்து அதிகாரங்களையும் மையப்படுத்தும் போக்குக்கு முழு முற்றாக வழிகாட்டியுள்ளது. தற்போது 93 சதவீத கல்வித் துறை அதிகாரம் மாநில அரசுகளின் கையில்தான் உள்ளது. அதை முற்றாக மையப்படுத்தும் போக்குக்கு உகந்த மாற்றங்களை ஏற்படுத்த பல்வேறு புதிய அமைப்புகள் பரிந்துரைக்கப்பட்டுள்ளன.*

*பிரதமர் தலைமையில் மையப்படுத்தப்பட்ட அதிகாரம் கொண்ட ராஷ்டிரிய சிக்ஷா ஆயோக் (ஆர்.எஸ்.ஏ.) உருவாக்குவது என முன்மொழியப்பட்டுள்ளது. அரசியல் தலையீடு இல்லாத கல்வித் துறையின் சுதந்திரம் குறித்து பெருமை பேசும் இந்த அறிக்கைதான், மறுபுறத்தில் 16 பேர் கொண்ட பிரதமர் தலைமையிலான குழுவுக்கு ஒட்டுமொத்த அதிகாரத்தை தூக்கிக்கொடுத்துள்ளது.*

நாடாளுமன்ற சட்டத்தின் மூலம் உருவாக்கப்பட்ட பல்கலைக்கழக மானியக் குழு, அகில இந்திய தொழில்நுட்ப கவுன்சில், மெடிக்கல் கவுன்சில் ஆஃப் இந்தியா போன்ற அமைப்புகளை சிதைக்கும் முயற்சியை கச்சிதமாக வகுத்துக் கொடுத்துள்ளது கஸ்தூரி ரங்கன் அறிக்கை.

பல ஆபத்தான விளைவுகளை உருவாக்கும் 'தேசிய ஆராய்ச்சி நிறுவனம்' என்ற மற்றொரு மையப்படுத்தப்பட்ட சர்வாதிகார அமைப்பை உருவாக்கவும் ஆலோசனை வகுத்துக் கொடுக்கப் பட்டுள்ளது. "இத்தகைய ஆராய்ச்சி நிறுவனங்கள் மாநில சுயாட்சி கொள்கைக்கு எதிரானவை. இந்த அமைப்புகள் இயந்திர கதியாக செயல்படுவதற்கே வழிவகுக்கும். தனிப்பட்ட ஆராய்ச்சியாளரின் அறிவு தாகத்துக்கு பூட்டுப் போட்டு விடும்" என மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சுட்டிக்காட்டியுள்ளது.

தாய்மொழிக் கல்வியை தகர்க்க, இந்தி மொழியை திணிக்க, மும்மொழி கல்வித் திட்டத்தை புகுத்த, வகைதொகையில்லாமல் வியாக்கியானங்களை பேசியிருக்கிறது வரைவறிக்கை. அதுபோல எல்லா மொழிகளுக்கும் அடிப்படை சமஸ்கிருத மொழி என கதை விட்டுள்ளார் ராக்கெட் நிபுணர் கஸ்தூரி ரங்கன்.

### எங்கும் வணிகமயம், எதிலும் வணிகமயம்

உலகத்திலேயே அதிக அளவில், சுமார் 31 கோடி மாணவர்களைக் கொண்ட நாடாக இந்தியா திகழ்கிறது. இத்தனை மாணவர்கள் உருவானதற்குத் தனியார் துறை பங்களிப்புதான் காரணம் எனப் பலர் விதந்தோதி வருகின்றனர். ஆனால், அது முழு உண்மையல்ல. அரசுக் கல்வி நிலையங்களின் வாயிலாகவே மாணவர்கள் கல்வி பயில்வதற்கான தளமும் வாய்ப்பும் கொடுக்கப்பட்டுள்ளது என்பதை பல்வேறு புள்ளிவிவரங்கள் எடுத்துக்காட்டுகின்றன. அதிலும் குறிப்பாக சமூகரீதியாக, கல்விரீதியாகப் பின்தங்கிய பிரிவினர் கல்வி பயிலும் இடமாக அரசுக் கல்வி நிலையங்களே இன்றும் விளங்கி வருகின்றன.

கல்வி என்பது சமூக மாற்றத்துக்கான கருவியாக இருப்பதால் சமத்துவமாகக் கல்வி பெறும் வாய்ப்பை அனைவருக்கும் ஏற்படுத்தித் தருவதுதான் அரசின் கடமை என அரசியலமைப்புச் சட்டம் சுட்டிக் காட்டியுள்ளது. ஆனால், கல்வித்துறையில் வணிகமயம் என்பது சமத்துவ சமூகநீதியை குழிதோண்டிப் புதைத்துள்ளது.

இதுவரை இந்திய கல்வி குழுக்கள் கொடுத்த பரிந்துரைகளை எல்லாம் ஒரு படி தாண்டி தனியார் பள்ளிகளும், தனியார் உயர்கல்வி நிலையங்கள் போன்று, தங்கள் விருப்பம்போல் கல்வி கட்டணத்தை நிர்ணயித்துக் கொள்ளலாம் என முழு அனுமதி அளிக்கிறது இந்த வரைவு.

மனிதவள மேம்பாட்டு அமைச்சகத்தின் 2016-17 ஆண்டு அறிக்கையின்படி இந்தியாவில் பழங்குடி இனத்தினர் 5.2%, பிற்படுத்தப்பட்ட வகுப்பினர் 14.3%, இதர பிற்படுத்தப்பட்ட வகுப்பினர் 34%, முன்னேறிய வகுப்பினர் 46.5% என்ற விகிதாச்சாரத்தில் மாணவர்கள் உயர்கல்வி பெற்று வருவதாகக் கூறுகிறது. இத்தகைய அசமத்துவ நிலை மாற்றுவதற்கு அரசு கல்வி நிலையங்களும் சமூகநீதி கோட்பாடும் மிக அவசியம். ஆனால் சமூகநீதி கோட்பாட்டுக்கு எதிராக இடஒதுக்கீட்டு முறையை ஒழித்துக் கட்டுவதற்கு ஆர்.எஸ்.எஸ்.-பா.ஜ.க. கூட்டத்தினர் குத்தீட்டியோடு களமிறங்கியுள்ளனர்.

இந்திய உழைப்பாளி வர்க்கத்தில் ஏற்படுத்தப்போகும் மாற்றங்கள் என்னென்ன என்பது குறித்து புதிய கல்விக் கொள்கை கிஞ்சித்தும் சிந்தித்ததாகத் தெரியவில்லை. எவ்வித துறைசார்ந்த அறிவும் இன்றி உழைப்பதற்கான சக்தியை மட்டுமே கொண்ட பெரும்பாலான உழைக்கும் கூட்டத்தை உருவாக்கி, நவீன இயந்திரங்களின் உதவியோடு மலினமாக உழைப்புச் சுரண்டலை நடத்த ஏகாதிபத்திய அமைப்புகளின் சதி திட்டத்துக்கு சாஷ்டாங்கமாக காலில் விழுந்து வரவேற்பு கொடுத்துள்ளது வரைவு அறிக்கை.

எல்லா மட்டத்திலும் தேர்வுகள், நுழைவுத் தேர்வுகள் என்பதினூடாக தேர்வுக்கான பயிற்சி மையங்களை தெருவுக்குத் தெரு திறந்து வைத்து பெருமுதலாளிகள் கொள்ளை லாபம் ஈட்ட வழி காட்டியுள்ளது வரைவு அறிக்கை. எத்தகைய சமூகச் சீர்கேடுகளை இது இந்திய சமூகத்தில் ஏற்படுத்தப் போகிறது என்பது குறித்து அக்கறை கொள்ளாதது வெட்கக்கேடு. உதாரணத்துக்கு தற்போது ஐ.ஏ.எஸ். தேர்வு எழுத டெல்லி பயிற்சி மையம் ஒன்றில் பயில 50 லட்ச ரூபாய் செலவழிக்க வேண்டிய நிலை உள்ளது. 50 லட்சம் கொடுத்து பயின்று ஐ.ஏ.எஸ். ஆகும் அதிகாரியிடம் சமூக அக்கறையை எதிர்பார்க்க இயலுமா?

## செய்ய வேண்டியது என்ன?

*ஜனநாயக விழுமியங்களை வளர்த்தெடுக்க வேண்டிய கல்வி நிலையங்களில் முழுமுற்றாக ஆசிரியர், மாணவர் ஜனநாயக உரிமைகளை பறித்து நட்ட நடு ஆற்றில் நிறுத்தியுள்ளது கஸ்தூரி ரங்கன் குழு.*

*கஸ்தூரிரங்கன் தலைமையிலான குழு முன்மொழிந்துள்ள தேசிய கல்விக் கொள்கை வரைவு 2019 -ஐ முழுமையாக நிராகரிப்போம்! இந்திய அரசியலமைப்புச் சட்டத்தின் விழுமியங்களை பாதுகாக்கக்கூடிய, பலப்படுத்தக்கூடிய, புதிய கல்வி முறையைக் காண போராட்டத்தை முன்னெடுப்போம்!*

## 5. எங்கெல்ஸ் 125: மார்க்சியத்தின் அடித்தளம் எங்கெல்ஸ்

*ச. லெனின்*

*பொதுவாக, மார்க்ஸ் என்றோ, எங்கெல்ஸ் என்றோ, தனித்தனியாக அறியப்படுவதைவிட மார்க்ஸ்-எங்கெல்ஸ் என்று இணைந்தே அவர்கள் அறியப்பட்டனர். ஆனால் எங்கெல்ஸ் குறித்து எழுதும் பலர் எங்கெல்ஸ் மார்க்சின் மறு பாதி மட்டுமல்ல; எங்கெல்சுக்கு என்று தனித்த அடையாளம் உண்டு என்று வேண்டுமென்றே எழுதுகின்றனர். நிச்சயம் அவரின் தனித்த படைப்புகள், அவருக்கேயான தனித்த அடையாளத்தை கொடுக்கும். ஆனால் அதுவும் மார்க்சியம் என்கிற வரையறைக்குள்தான் அடங்கும் என்பதை தெரிந்தே அவர்கள் கதையாடுகின்றனர். உண்மையில் சொல்லப்போனால் எங்கெல்ஸ் தான் முதல் மார்க்சிஸ்ட். மார்க்சின் எழுத்துக்கள் மீதான முதல் விமர்சகரும், அந்த எழுத்தை கவனமாக மேம்படுத்துபவரும் அவரே.*

*தங்களுக்கான தனித்த அடையாளம் என்று அவர்களுக்குள் எந்த தன்முனைப்பும் மார்க்சுக்கும் எங்கெல்சுக்கும் இருந்ததில்லை. மார்க்சின் எழுத்துக்களுக்கு ஒரு தனி வாசகர் கூட்டமே இருந்தது. மூலதனம் எழுதும் பணியில் மார்க்ஸ் தீவிரமாக ஈடுபட்டிருந்தபோது, பல பத்திரிக்கைகளில் மார்க்சின் ஒப்புதலுடன் மார்க்சின் பெயரில் வந்த கட்டுரைகளை எழுதியது எங்கெல்ஸ்தான். இதை எங்குமே எங்கெல்ஸ் குறிப்பிட்டது கிடையாது. ரஷ்ய புரட்சிக்கு பிறகு மார்க்ஸ், எங்கெல்ஸ் குறித்த ஆய்வுகளை மேற்கொள்ளும் போது மார்க்சுக்கும் எங்கெல்சுக்கும் இடையே நடைபெற்ற கடிதப் போக்குவரத்தே இந்த தகவலை வெளிக்கொண்டு வந்தது.*

*முதலாளித்துவ சிந்தனைப் போக்குதான் தனி மனிதர்களை முன்னிறுத்தி சமூகத்தை பின்னால் தள்ளும். இயக்கவியல் வரலாற்றுப் பொருள்முதல்வாத அணுகுமுறை குறித்து மார்க்சும் எங்கெல்சும் கூறும் போது கூட, இது தங்களது தனித்த கண்டுபிடிப்பல்ல என்றும், எங்களுக்கு முந்தையவர்களின் பங்களிப்புகளை சற்று மேம்படுத்தி நாங்கள் வழங்கியுள்ளோம் என்றே குறிப்பிடுகின்றனர்.*

*மார்க்ஸ் – எங்கெல்ஸ் இருவருக்கும் தனிப்பட்ட திறமைகளும், ஆளுமைகளும்*

உண்டு. அதில் யாருக்கும் இருவேறு கருத்து கிடையாது. மார்க்ஸ் எங்கெல்ஸ் ஆகியோரின் ஒருங்கிணைவுக்கு பிறகுதான் வர்க்கம், வர்க்கப் போராட்டம் என்கிற புரிதலும், கற்பனாவாத சோஷலிசம் என்பதிலிருந்து விஞ்ஞான சோஷலிசம் என்கிற வளர்ச்சியும், இயக்கவியல் வரலாற்றுப் பொருள்முதல்வாதம் என்கிற ஆய்வு கண்ணோட்டமும் சாத்தியப்பட்டது என்பதை யாரும் மறுக்க முடியாது. இந்த ஒருங்கிணைவு இல்லாமல் போயிருந்தால் இருவரும் தனித்தனியே பெரிய ஆளுமைகளாக இருந்திருக்கலாமே அன்றி, மக்களுக்கான செழுமைப்படுத்தப்பட்ட ஒரு தத்துவம் கிடைத்திருக்குமா? என்பது மிகப் பெரிய கேள்வியே.

### அரசியல் பொருளாதாரம்

1859-ம் ஆண்டு வெளியான "அரசியல் பொருளாதாரம் குறித்த விமர்சனம்" என்கிற நூல் மார்க்சின் ஆகச் சிறந்த பங்களிப்புகளில் ஒன்றாக கருதப்படுகிறது. அதன் தொடர்ச்சியாக அந்த நூலின் இரண்டாம் பாகத்தை மார்க்ஸ் எழுதத் துவங்கினார். அதுவே "மூலதனம்" நூலாக வடிவம் எடுத்தது.

அரசியல் பொருளாதாரம் குறித்த ஒரு துவக்கப் புள்ளியை முதலில் வைத்தவர் எங்கெல்ஸ் தான். 1843-ம் ஆண்டின் இறுதியில் அவர் எழுதிய "அரசியல் பொருளாதாரம் குறித்த விமர்சனம் பற்றிய ஒரு பார்வை (outline)" என்ற சிறு கட்டுரை மூலம் முதலில் அதை துவக்கி வைக்கிறார். அக்கட்டுரையின் முதல் வரியிலேயே "வர்த்தகம் விரிவானதன் ஒரு இயற்கை நிகழ்வு போக்காகவே அரசியல் பொருளாதாரம் நிலைபெற்றது. துவக்க நிலையில் உள்ள, அறிவியல் பூர்வமற்ற, சிறு வர்த்தகத்தை அறிவியல் தன்மையோடு, விரிந்து பரந்த அங்கீகாரம் பெற்ற, பித்தலாட்ட வேலைகளை செய்வதற்கான முறையாக மாற்றி அமைத்துள்ளது" என்று முதலாளித்துவ முறையை எங்கெல்ஸ் விமர்சிக்கிறார்.

மேலும் தனிச் சொத்துடமை இருக்கும் வரை "தேச வளம்" (national wealth) என்கிற வார்த்தையே அர்த்தமற்றதாகும் என்றும், பொதுச் சொத்து என்பதே தனிச் சொத்துடையோரின் நலன்களை பேணுவதற்காக இருப்பதுதான் என்கிறார் எங்கெல்ஸ்.

மார்க்சும் எங்கல்சும் மேஜை புரட்சியாளர்கள் அல்ல. 1848-49 ஆண்டுகளில்

ஜெர்மனியில் நடந்த புரட்சியில் அவர்கள் இருவரும் நேரடியாக பங்கேற்றனர். 1849-ம் ஆண்டு ப்ரஷ்ய முடியாட்சிக்கு எதிரான ஆயுதம் தங்கிய புரட்சியில் எங்கெல்ஸ் பங்கேற்றார். அதோடு ப்ரசில்ஸ்-இல் கம்யூனிஸ்ட் இயக்க அமைப்பை உருவாக்குதல், ஒருங்கிணைந்த கம்யூனிஸ்ட் அமைப்பை கட்டுதல், ஜெர்மன் தொழிலாளர் அமைப்பு, கம்யூனிச புரட்சிக்கான சர்வதேச அமைப்பு, முதல் சர்வதேச அகிலம், இரண்டாம் சர்வதேச அகிலம் (எங்கல்ஸ்) உள்ளிட்டவைகளை கட்டியமைப்பதில் மார்க்சும் எங்கெல்சும் தீவிரமாக பங்கேற்றனர்.

### கற்பனாவாத சோஷலிசமும் விஞ்ஞான சோஷலிசமும்

எங்கல்ஸின் "கற்பனாவாத சோஷலிசமும் விஞ்ஞான சோஷலிசமும்" என்ற நூல் 1880-ம் ஆண்டு வெளியானது. இதில் வர்க்கப் போராட்டத்தையும், இயக்கவியல் வரலாற்று பொருள்முதல் வாதத்தையும் தெளிவாக விளக்கி, சோஷலிசம் என்பது கற்பனையல்ல; அது வரலாற்று வளர்ச்சிப் போக்கில் தவிர்க்கமுடியாத கட்டம் என்பதை மிகத் தெளிவாக எடுத்துரைப்பார்.

"முதலாளித்துவ முறையிலான உற்பத்தியின் முதிர்ச்சியுறாத நிலைமைகளுக்கும் முதிர்ச்சியுறாத வர்க்க நிலைமைகளுக்கும் ஒத்திசைவான முதிர்ச்சியுறாத கொள்கைகளே முன்வைக்கப்பட்டன. சமூகப் பிரச்சினைகளுக்குரிய தீர்வினை, வளர்ச்சியுறாத பொருளாதார நிலைமைகளில் இன்னமும் மறைந்து கிடந்த அந்தத் தீர்வினை கற்பனாவாதிகள் மனித மூளையிலிருந்து உருவாக்க முயன்றார்கள்". (அதேபோல்)"அந்தக் காலகட்டத்தில் முதலாளித்துவ உற்பத்தி முறையும், அதோடுகூட, முதலாளித்துவ வர்க்கத்துக்கும் பாட்டாளி வர்க்கத்துக்கும் இடையேயான பகைமையும் இன்னமும் அரைகுறை வளர்ச்சியையே கண்டிருந்தன. இங்கிலாந்தில் அப்போதுதான் தோன்றியிருந்த நவீனத் தொழில்துறை, ஃபிரான்சில் இன்னமும் அறியப்படாததாகவே இருந்தது. ஆனால், நவீன தொழில்துறை ஒருபுறம் மோதல்களை வளர்க்கிறது. உற்பத்தி முறையில் ஒரு புரட்சியையும், உற்பத்தி முறையின் முதலாளித்துவத் தன்மைக்கு முடிவு கட்டுதலையும் அவசியமாக்கும் மோதல்களை வளர்க்கிறது. தான் தோற்றுவித்த வர்க்கங்களுக்கு இடையேயான மோதல்களை மட்டுமின்றி, தான் உருவாக்கிய அதே உற்பத்தி சக்திகளுக்கும் பரிவர்த்தனை வடிவங்களுக்கும் இடையேயான மோதல் களையும் வளர்க்கிறது."

என்கிறார்.

முதலாளித்துவத்தின் ஆரம்பக்கட்டத்தில் "சுயேச்சையான அரசியல் நடவடிக்கைக்குச் சற்றும் திறனற்றிருந்த அந்த தொழிலாளி வர்க்கம் ஒடுக்கப்பட்ட, துயருறும் பகுதியாகவே தோற்றமளித்தது. தனக்குத் தானே உதவிக் கொள்ளும் திறனற்றிருந்த அந்நிலையில், அதிகம் போனால் வெளியிலிருந்தோ அல்லது மேலிடத்திலிருந்தோதான் தனக்குத் தேவையான உதவியைப் பெற்றிட முடியும். இந்த வரலாற்றுச் சூழ்நிலை சோஷலிசத்தின் நிறுவனர்கள் மீதும் செல்வாக்குச் செலுத்தியது. முதலாளித்துவ முறையிலான உற்பத்தியின் முதிர்ச்சியுறாத நிலைமைகளுக்கும் முதிர்ச்சியுறாத வர்க்க நிலைமைகளுக்கும் ஒத்திசைவான முதிர்ச்சியுறாத கொள்கைகளே (கற்பனாவாத சோஷலி ஸ்டுகளால்) முன்வைக்கப்பட்டன."

வளர்ச்சியடையாத முதலாளித்துவ காலத்தில், முதிர்ச்சியடையாத பாட்டாளி வர்க்கத்தின் காலத்தில் கற்பனாவாத சோஷலிஸ்டுகள் மனித மூளையின் சிந்தனையின் மூலமே உருவாக்கிட முடியும் என்று முயன்றனர். உண்மையில் சமூக மாற்றத்திற்கான தத்துவத்தை ஒருவரின் அகவய புரிதலால் மட்டுமே உருவாக்கிட முடியாது. சமூக எதார்த்தமும், வரலாற்று ரீதியான வளர்ச்சிப்போக்கும் அதற்கு மிக மிக அவசியம். சமூகம் உடைமைகளை மொத்தமாக கொண்ட பெரு முதலாளிகளாகவும், உடைமையற்ற பாட்டாளிகளாகவும் பிளவுற்ற சூழலையும், பிரம்மாண்ட உற்பத்திச் சக்திகள் இதுநாள் வரை தனிநபர்களைச் செழிப்பாக்கவும், சாதாரண மக்களை அடிமையாக்கவுமே பயன்படுத்தி வந்தன என்ற சமூக எதார்த்தத்தை வரலாற்று ரீதியாக ஆய்வு செய்து மார்க்சும் எங்கல்சும் விஞ்ஞான சோஷலிசத்தை முன்வைத்தனர். அதுவரை யாரும் மேற்கொள்ளாத இயக்கவியல் வரலாற்றுப் பொருள்முதல்வாதம் என்ற கோட்பாட்டின் அடிப்படையில் அதை வகுத்தளித்தனர்.

இனிமேலும் சோஷலிசம் என்பது ஏதோவொரு அறிவுசார்ந்த மூளையின் தற்செயலான கண்டுபிடிப்பில்லை. வரலாற்று ரீதியாக வளர்ச்சி பெற்ற இரு வர்க்கங்களான பாட்டாளி வர்க்கத்துக்கும் முதலாளி வர்க்கத்துக்கும் இடையே நிகழும் போராட்டத்தின் தவிர்க்க முடியாத விளைவு ஆகும். சாத்தியமான

அளவுக்குக் குறைகளற்ற, முழுநிறைவான, ஒரு சமுதாய அமைப்பை உற்பத்தி செய்வது சோஷலிசத்தின் பணியாக இனியென்றும் இருக்கப் போவதில்லை; இந்த வர்க்கங்களும் அவற்றுக்கு இடையேயான பகைமையும் தவிர்க்க முடியாதவாறு உதித்தெழக் காரணமாக இருக்கும் நிகழ்வுகளின் வரலாற்று-பொருளாதாரத் தொடர்ச்சியை நுணுகி ஆய்வதும், இவ்வாறு தோற்றுவிக்கப்பட்ட பொருளாதார நிலைமைகளில் இந்த மோதலுக்கு முடிவு கட்டுவதற்கான சாதனங்களைக் கண்டறிவதும்தான் சோஷலிசத்தின் பணியாகும்.

முந்தைய கால சோஷலிசம் நடப்பிலுள்ள முதலாளித்துவ உற்பத்தி முறையையும் அதன் பின்விளைவுகளையும் கண்டித்தது உண்மை தான். ஆனால், அவற்றை விளக்கிட, அதனால் முடியவில்லை. முதலாளித்துவத்தில் தவிர்க்க முடியாதபடி தொழிலாளி வர்க்கம் சுரண்டப்படுவதை, எந்த அளவுக்குக் கடுமையாக கண்டித்ததோ, அந்த அளவுக்குத் தெளிவாக, இச்சுரண்டல் எதில் அடங்கியிருந்தது, அது எவ்வாறு தோன்றியது என்பதை அதனால் எடுத்துக்காட்ட முடியவில்லை. ஒரு குறிப்பிட்ட வரலாற்றுக் காலகட்டத்தில் முதலாளித்துவம் தவிர்க்க முடியாதது என்பதை போலவே, அதன் வீழ்ச்சியும் தவிர்க்க முடியாதது என்பதை சுட்டிக்காட்டியதோடு, உபரி மதிப்பு என்ற மார்க்சின் கண்டுபிடிப்பு மூலம் இதுநாள்வரை இரகசியமாக இருந்து வந்த, முதலாளித்துவத்தின் சாராம்சத் தன்மை தோலுரித்துக் காட்டப்பட்டது என்கிறார் எங்கெல்ஸ் .

கற்பனாவாத சோஷலிஸ்டுகள் முயன்றது போல் சோஷலிசம் என்பது அறிவுசார் சிந்தனையின் தற்செயல் கண்டுபிடிப்பு அல்ல. மாறாக அது சுரண்டப்படும் வர்க்கமான பாட்டாளி ( தொழிலாளி ) வர்க்கத்திற்கும், அவர்களை சுரண்டும் முதலாளித்துவ வர்க்கத்திற்கும் இடையே நிகழும் போராட்டத்தின் தவிர்க்க முடியாத விளைவாகவே சோஷலிசம் பிறக்கும் என்று மார்க்சும் எங்கல்சும் கூறினர்.

### வேலைப் பிரிவினை

மார்க்சுக்கும் எங்கெல்சுக்கும் இடையே ஒரு வேலைப்பிரிவினை இருந்தது என்றும், மார்க்ஸ் முதலாளித்துவ பொருளாதாரத்தின் முழு வடிவத்தையும் அதன் சுரண்டலையும் பற்றி எழுத தன்னை முழுவதும் ஈடுபடுத்திக் கொண்டார் என்றும், எங்கெல்ஸ் மார்க்சியத்தின் அடிப்படைகளான இயக்கவியல் குறித்தும், விஞ்ஞான

*சோஷலிசம் பற்றியும், வரலாற்றியல் பொருள்முதல்வாதம் குறித்தும் எழுதினார் என்று சிலர் கூறுகின்றனர். மார்க்ஸ் எது குறித்து எழுதுகிறார் என்று எங்கெல்சுக்கும், எங்கெல்ஸ் எதில் கவனம் செலுத்துகிறார் என்று மார்க்சுக்கும் நன்றாகவே தெரியும். இருவரும் இணைந்து எது பற்றி எழுதுவது என்றும் முடிவு செய்து எழுதியுள்ளனர். அவர்களின் எழுத்துக்களை பார்த்தால் இருவரும் தத்துவம், பொருளாதாரம், இயக்கவியல் என பல தளங்களில் ஆய்வுகளை மேற்கொண்டுள்ளனர் என்பது புரியும்.*

*மார்க்ஸ் தனது மூலதனம் நூலுக்கான வேலையை 1859-ல் வெளியான "அரசியல் பொருளாதாரம் குறித்த விமர்சனம்" எனும் நூலுக்கு முன்பிருந்தே துவங்கிவிட்டார். மூலதனம் நூலுக்கான வேலைக்கு மார்க்ஸ் கூடுதல் நேரம் ஒதுக்கினார் என்ற போதும், ஃபாயர்பாக் பற்றிய ஆய்வறிக்கை, தத்துவத்தின் வறுமை, பாரிசில் ஜூன் புரட்சி, பிரான்சில் வர்க்கப் போராட்டம், லூயி போனபார்ட்டின் பதினெட்டாம் புரூமெர் என வரலாற்று பொருள்முதல்வாதம் குறித்தும், தத்துவம் இயக்கவியல் பற்றியும் மார்க்ஸ் இக்காலத்தில் எழுதியுள்ளார். இங்கிலாந்தின் நிலைமை, இங்கிலாந்தில் தொழிலாளி வர்க்கத்தின் நிலை, கம்யூனிஸத்தின் கோட்பாடுகள், ஜெர்மனியில் விவசாயிகள் புரட்சி, ஜெர்மனியில் புரட்சியும் எதிர் புரட்சியும் ஆகிய நூல்களை எங்கெல்ஸ் இதே காலத்தில் எழுதியுள்ளார். இக்காலத்தில்தான் புனிதக் குடும்பம், ஜெர்மன் தத்துவம், கம்யூனிஸ்ட் அறிக்கை போன்றவற்றை மார்க்சும் எங்கெல்சும் இணைந்து எழுதியுள்ளனர். இவை தவிர பல்வேறு இதழ்களில் கட்டுரைகளும், மாநாட்டு அறிக்கைகளும் முன்மொழிவுகளும் என இன்னும் எத்தனையோ முக்கியமான அம்சங்களை மூலதனம் முதல் தொகுதி வெளிவருவதற்கு முன்பே எழுதியுள்ளனர்.*

*1883-ல் மார்க்ஸ் மறைந்த பிறகு மார்க்சின் கையெழுத்தை அறிந்தவரும், மார்க்சின் கருத்துக்களை மற்ற எவரைவிடவும் நன்கு அறிந்திருந்த ஒரே நபர் எங்கெல்ஸ்தான். எங்கெல்ஸிடம் தான் தனது அனைத்து குறிப்புக்களையும் ஒப்படைக்குமாறு மார்க்ஸ் தனது மகளிடம் கேட்டுக் கொண்டார். மூலதனம் நூலின் இரண்டாம் மற்றும் மூன்றாம் தொகுதிகள் எங்கெல்ஸ் இல்லையெனில் வெளிவந்திருப்பதற்கான வாய்ப்பே இல்லை.*

*தனது உடல் நலம் பாதிக்கப்பட்ட போது கூட எங்கு மூலதனம்*

*நூலின் பணிகளை முடிக்காமல் போய்விடுவோமோ என்றே எங்கெல்ஸ் கவலைப்பட்டுள்ளார். ஆனால் இதே கால கட்டத்தில்தான் எங்கல்சின் சிறந்த படைப்புகளான "குடும்பம், தனிச் சொத்து, அரசு ஆகியவற்றின் தோற்றம்" " லுத்விக் ஃபாயர்பாக் மற்றும் மூலச் சிறப்புமிக்க ஜெர்மன் தத்துவத்தின் முடிவு" ஆகிய நூல்களை எழுதினார். தான் இறப் பதற்கு ஓராண்டுக்கு முன் மூலதனம் நூலின் இறுதி பகுதியான மூன்றாம் தொகுதியையும் வெளியிட்டு, தான் தீர்மானித்த பணியையும் சிறப்பாக செய்து முடித்தார் எங்கெல்ஸ்.*

*"மார்க்சும் அவர் குடும்பத்தினரும் கொடிய வறுமையில் சிக்கித் துன்பப்பட்டார்கள். எங்கெல்ஸ் மட்டும் தன்னல மறுப்புடன் எப்போதும் பண உதவி செய்து கொண்டே இருந்திராவிட்டால் மார்க்ஸ் மூலதனம் என்ற நூலை எழுதி முடித்திருக்க முடியாது என்பது மட்டுமல்ல; தவிர்க்க முடியாதபடி அவர் வறுமையால் மடிந்திருப்பார்" என்று லெனின் குறிப்பிடுகிறார்.*

*மார்க்ஸ் வாழ்ந்த காலத்தில் அவர் வாழ்வதற்கும், காலத்தை வென்று மார்க்ஸ் என்றும் நிலைத்து நிற்பதற்கும், மார்க்சிய தத்துவம் வலுவான அடித்தளம் பெறுவதற்கும் எங்கெல்சின் அயராத பங்களிப்பே அனைத்திற்கும் அடிப்படையாக திகழ்ந்தது என்பதே உண்மை*



கணியம் அறக்கட்டளை

தொலை நோக்கு – Vision

தமிழ் மொழி மற்றும் இனக்குழுக்கள் சார்ந்த மெய்நிகர்வளங்கள், கருவிகள் மற்றும் அறிவுத்தொகுதிகள், அனைவருக்கும் கட்டற்ற அணுக்கத்தில் கிடைக்கும் சூழலை உருவாக்குதல்.

பணி இலக்கு – Mission

அறிவியல் மற்றும் சமூகப் பொருளாதார வளர்ச்சிக்கு ஒப்ப, தமிழ் மொழியின் பயன்பாடு வளர்வதை உறுதிப்படுத்துவதும், அனைத்து அறிவுத் தொகுதிகளும், வளங்களும் கட்டற்ற அணுக்கத்தில் அனைவருக்கும் கிடைக்கச்செய்தலும்.

எமது பணிகள்

கணியம் மின்னிதழ் kaniyam.com

கணிப்பொறி சார்ந்த கட்டுரைகள், காணொளிகள், மின்னூல்களை இங்கு வெளியிடுகிறோம்.

கட்டற்ற தமிழ் நூல்கள் FreeTamilEbooks.com

இங்கு யாவரும் எங்கும் பகிரும் வகையில், கிரியேட்டிவ் காமன்ஸ் உரிமையில், தமிழ் மின்னூல்களை இலவசமாக, அனைத்துக் கருவிகளிலும் படிக்கும் வகையில் epub, mobi, A4 PDF, 6 inch PDF வடிவங்களில் வெளியிடுகிறோம். தமிழுக்கான கட்டற்ற மென்பொருட்கள் உருவாக்கம் தமிழ் ஒலியோடைகள் உருவாக்கி வெளியிடுதல் விக்கி மூலத்தில் உள்ள மின்னூல்களை பகுதிநேர/முழு நேரப் பணியாளர்கள் மூலம் விரைந்து பிழை திருத்துதல் OpenStreetMap.org ல் உள்ள இடம், தெரு, ஊர் பெயர்களை தமிழாக்கம் செய்தல் மேற்கண்ட திட்டங்கள், மென்பொருட்களை உருவாக்கி

செயல்படுத்த உங்கள் அனைவரின் ஆதரவும் தேவை. உங்களால் எவ்வாறேனும் பங்களிக்க இயலும் எனில் உங்கள் விவரங்களை *kaniyamfoundation@gmail.com* க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

### வெளிப்படைத்தன்மை

கணியம் அறக்கட்டளையின் செயல்கள், திட்டங்கள், மென்பொருட்கள் யாவும் அனைவருக்கும் பொதுவானதாகவும், முழுமையான வெளிப்படைத்தன்மையுடனும் இருக்கும். இந்த இணைப்பில் செயல்களையும், இந்த இணைப்பில் மாத அறிக்கை, வரவு செலவு விவரங்களுடனும் காணலாம். கணியம் அறக்கட்டளையில் உருவாக்கப்படும் மென்பொருட்கள் யாவும் கட்டற்ற மென்பொருட்களாக மூல நிரலுடன், *GNU GPL, Apache, BSD, MIT, Mozilla* ஆகிய உரிமைகளில் ஒன்றாக வெளியிடப்படும். உருவாக்கப்படும் பிற வளங்கள், புகைப்படங்கள், ஒலிக்கோப்புகள், காணொளிகள், மின்னூல்கள், கட்டுரைகள் யாவும் யாவரும் பகிரும், பயன்படுத்தும் வகையில் கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இருக்கும்.

### நன்கொடை

உங்கள் நன்கொடைகள் தமிழுக்கான கட்டற்ற வளங்களை உருவாக்கும் செயல்களை சிறந்த வகையில் விரைந்து செய்ய ஊக்குவிக்கும். பின்வரும் வங்கிக் கணக்கில் உங்கள் நன்கொடைகளை அனுப்பி, உங்கள் விவரங்களை *kaniyamfoundation@gmail.com* க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

*Kaniyam Foundation*

*Account Number : 606 1010 100 502 79*

*Union Bank Of India*

*West Tambaram, Chennai*

*IFSC – UBIN0560618*

*Account Type : Current Account*